

# ஸ்ரீ சத்யவீர தீர்த்தர்


மூலம்

**மலகி ஜயதீர்த்தாச்சார்**

தமிழில்

'ஜகன்னாத கேசவ' **சத்ய நாராயணன்**

# ஸ்ரீ சத்யவீர தீர்த்தர்



கன்னடத்தில்

**மலகி ஜயதீர்த்தாச்சார்**

தமிழில் மொழிபெயர்த்தவர்

'ஜகன்னாத கேசவ' **சத்ய நாராயணன்**

**ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**

பெங்களூரு

**ஸ்ரீசத்யவீர கதாம்ருதம்**

| | | |
|---|---|---|
| ஆண்டு | : | 2018 |
| பக்கங்கள் | : | 64 |
| விலை | : | **ரூ. 40.00** |
| கன்னடத்தில் | : | மலகி ஜெயதீர்த்தாச்சார் |
| தமிழில் | : | **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**<br>**கைப்பேசி:** 89044 58276 |
| வெளியீடு | : | **ஜகன்னாத கேசவ பப்ளிகேஷன்ஸ்**<br>பெங்களூரு |

ஶ்ரீ திக்விஜயராமோ விஜயதே
ஶ்ரீமத் ஜகத்குரு ஶ்ரீமத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்
உத்தராதி மடம்

**ஜகத்குரு ஶ்ரீமன்மத்வாசார்ய மூலமஹாசம்ஸ்தானம்**
**ஶ்ரீமத்உத்தராதி மடாதீசரான ஶ்ரீஶ்ரீ 1008 ஶ்ரீ சத்யபிரமோத தீர்த்த ஶ்ரீபாதங்களவரின்**

## அனுக்கிரக செய்தி

*ஶ்ரீஹம்ஸநாமக ஶ்ரீஹரியிடமிருந்து துவங்கிய இந்த திவ்ய பவ்ய பரம்பரையில் சாக்ஷாத் வாயுதேவர் மற்றும் வாயுதேவரின் சன்னிதானம் உள்ள மகாஞானிகள் வீற்றிருக்கின்றனர். அத்தகைய மகானுபாவர்களின் வரிசையில், நறுமணமுள்ள பூவைப் போன்று இருப்பவர், பரமபூஜ்ய ப்ராதஸ்மரணீயரு ஶ்ரீஶ்ரீ சத்யவீர தீர்த்த ஶ்ரீபாதங்களவர்.*

*அவர் தமது நித்ய பாட பிரவசன, வாக்யார்த்த, வாதி-நிக்ரஹ, விஷ்ணு சர்வோத்தமத்வ நிரூபணம் மற்றும் அனைத்து மகா மந்திர ஜெபங்களால் பக்குவமடைந்த யோகிகளாக இருந்தார். தப்தமுத்ரா தாரணையை ஆதரித்து கிரந்தம் எழுதியது, ஆரணி மகாராஜாவிற்கு வாரிசுக்கு அருளியது, மறுமணத்தை கண்டித்தது, மலேரியா நோயினை போக்கியது, போன்ற சிறந்த செயல்களை ஶ்ரீஶ்ரீ சத்யவீர தீர்த்தர் செய்திருக்கிறார். அவரின் திவ்ய பவ்ய சரித்திரம் வெளி யாவதைக் கண்டு நமக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாகிறது.*

*நம் பிரிய சிஷ்யரான ஶ்ரீகிருஷ்ணமூர்த்தி பிதுருஹள்ளி அவர்கள் தற்போதே ஶ்ரீசத்யவீரரின் நித்ய ஹஸ்தோதகத்திற்காக ஒரு பெரிய தொகையை சேகரித்து குருவின் சேவையை செய்து, உடன் அங்கு சொந்தமாக பல கட்டிடங்களை கட்டியிருக்கிறார். தற்போது*

*'ஸ்ரீசத்யவீரரின் சரிதாம்ருத'த்திற்கு பெரிய உதவியையும் செய்திருக்கிறார்.*

*நாம் வணங்கும் ஸ்ரீமூலராம திக்விஜயராம சீதாதேவியர் ஸ்ரீபிதருஹள்ளி அவருக்கு ஆயுள் ஆரோக்யம் ஐஸ்வர்யங்களைக் கொடுத்து, அவரிடமிருந்து மேலும் பல சத்காரியங்களை நடத்திக் கொள்வதாக அருளட்டும் என்று ஸ்ரீஹரியிடம் பிரார்த்திக்கிறோம்.*

*இந்த புத்தகத்தை தொகுத்த ஸ்ரீ மலகி ஜயதீர்த்தாசார் யரிடமிருந்து, மேலும் பல கிருதிகள் வரவேண்டும் என்று விரும்புகிறேன்.*

பலிபிரதிபதா
ராணேபென்னூர் **- ஸ்ரீஸ்ரீ சத்யபிரமோத தீர்த்தர்**

ஸ்ரீஷம் வந்தே
ஸ்ரீ பாரதிரமணாய நம:

*மலை மேல் இருக்கும் கனக நரசிம்மனே அனைவரின் குலதெய்வம். மதலகட்டி பிராணதேவரே, இந்த பிராந்தியத்தின் பஞ்சபிராணன். ஜகத்குருகளான ஸ்ரீசத்யவீரரே அனைவரின் ஜீவநாடி. இந்த மூவரையும் வணங்குவதே அனைவரின் வாழ்க்கைக்கு ஆதார சக்தி.*

*கோர்லஹள்ளி வம்சத்தில் பிறந்தவரான ஸ்ரீசத்யவீரர், ஸ்ரீசத்யபராக்ரமரிடத்தில் பாடம் படித்த பண்டிதர். அவருக்குப் பிறகு உத்தராதி மடத்தில் பீடத்தை அலங்கரித்தார். ஹனுமந்த தேவரின் உபாசனையே அவருக்கு உயிர்மூச்சாக இருந்தது. அனைத்திற்கும் அவருக்கு முக்யபிராணர்தான். அவரிடம் நேரடியாக பேசுபவராக இருந்தார். ஆகவே, வாயுதேவரின் பீடம் இவரை அழைத்து அதில் அமர்த்தியதில் வியப்பில்லை. கடும் தவம், பாடம், உபன் யாசங் களினால் சாபங்களை போக்குபவராக இருந்தார். தினந்தோறும் பிராமணர்களுக்கு அன்னதானம் செய்பவராக இருந்தார். அடிக்கடி பண்டிதர்களுக்கு தங்கம், வெள்ளி என்று பரிசுகளைக் கொடுத்த கலியுகக் கர்ணன்.*

*நவீன மேற்கத்திய மோகத்தைக் கண்டு, வைதிக தர்மத்தின் சித்தாந்தம் மற்றும் சதாசாரங்கள் நடுங்கியபோது அவற்றை மறுபடி நிலைநாட்டிய பெருமை ஸ்ரீசத்யவீரருடையது. மதராஸ் வித்வத் சபையில், விதவை மறுமணம் செய்வது கூடாது என்று வாதிட்டார். மறுமணத்திற்கான கண்டனங்கள் இன்று அனைவருக்கும் தெரிகிறது. அதற்காக வித்வத் சபையினர் இவருக்கு தாமிரபத்திரம் கொடுத்து கௌரவித்தனர். அரசு கணக்காயரின் கட்டுப்பாட்*

*டிலிருந்து சம்ஸ்தானத்தை மீட்டெடுத்தார். மொத்த பாரதத்திலும் சுற்றுப்பயணம் செய்தார். மதராஸ் நகரம் மலேரியாவில் அவதிப் பட்டபோது, தமது தபஸ் சக்தியினால் அதை தூர விரட்டினார்.*

*இத்தகைய ஸ்ரீசத்யவீரரின் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதற்கு அருளியவர் ஸ்ரீ 1008 ஸ்ரீசத்யாத்ம தீர்த்தர். ஸ்ரீசத்யவீரரின் வழியில் வந்தவர். அவரின் பீடத்தை தற்போது அலங்கரிப்பவர். அவரை அனந்த வந்தனங்களினால் தியானிப்பவர்.*

*என் வித்யாகுருவும், ஸ்வரூபோத்தாரகருமான பரமபூஜ்ய மஹாஹுலி ஆசார்யரின் உபதேசம் மற்றும் செய்திகளே இந்த கிருதியை எழுதுவதற்கு உதவின. அவருக்கு என் அனந்தானந்த நமஸ்காரங்கள்.*

*இந்த இரண்டாம் பதிப்பிற்கு, ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பிதருஹல்லி அவர்கள் பெரும் உதவி செய்திருக்கிறார். அவருக்கு என் நன்றிகள்.*

*கன்னட எழுத்துக்கோர்ப்பு செய்த ஸ்ரீ வெங்கடேஷ் இனாமதி அவருக்கும், அட்டைப்படம் தயாரித்த ஸ்ரீ சேஷகிரியவருக்கும், அச்சிட்ட ஸ்ரீஹரிதாஸ் அவருக்கும் என் நன்றிகள்.*

**– ஜயதீர்த்தாச்சார்ய மலகி**



## தீரகுரு – ஞானத்தை வழங்கும்

# ஸ்ரீஸ்ரீ சத்யவீர தீர்த்தர்

**த**த்வஞானத்தின் அமைப்பே வேதங்கள். ‘வேத யதீதி வேத:’ ஜகத்தின் தலைவன் ஜகன்னாதன். ஜீவர்கள், ஜட ஆகியவற்றைப் பற்றிய அனைத்து தகவல்களையும் தெரிவிப்பதாலேயே இதை வேதம் என்று அழைக்கின்றனர். வேதம் அனாதி காலத்திலிருந்து இருப்பது. யாராலும் எழுதப்படாதது. நாசமடையாத நித்ய சாகித்யம். இதிகாசத்தின் எந்த காலகட்டத்திலும் வேதம் இல்லை என்று சொல்லமுடியாது. அனைத்து காலங்களிலும், அனைத்தைப் பற்றிய அறிவையும் அளிக்கும் வேதங்கள் இருந்தே வந்தன. அப்படியே வேதங்கள் போற்றும் இந்த வைதிக தர்மமும் அனாதியானவையே. வைதிக மதமே வைஷ்ணவ சித்தாந்தம். ‘வேத்யைஸ்ச சர்வை: அஹமேவ வேத்ய:’. ’அனைத்து வேதங் களும் என்னைப் பற்றியே சொல்கின்றன’ என்பது ஸ்ரீகிருஷ்ணனின் வாக்கு. வேதத்தைப் போலவே வைதிக வைஷ்ணவ சித்தாந்தமும் அனாதி காலத்திலிருந்து இருக்கிறது. இது துவக்கம் / முடிவு இல்லாத சித்தாந்தம். இந்த வைஷ்ணவ சித்தாந்தத்திற்கு துவக்கம் என்னும் காலகட்டம் இல்லை.

ஆனால் அனைத்து யுகங்களிலும் இதை வளர்க்க, நிரந்தரமான பரம்பரை ஒன்று இருந்தது. இந்த பரம்பரைக்கு வேதாந்த சாம்ராஜ்யத்தின் மூல பரம்பரை, சம்ஸ்தானம் என்று பெயர். சாக்ஷாத் ஹம்ஸ நாமக ஸ்ரீஹரியே இதை எப்போதும் முன் னெடுத்து வருகிறான். முக்தி யோக்யர்களுக்காக இது தன்னால்

முன்னெடுத்து வரவேண்டும் என்று அறிந்து, தன் பெயரையே இந்த சம்ஸ்தானத்திற்கு வைத்தார் ஸ்ரீஹரி. ‘உத்தர’ என்பது ஸ்ரீஹரியின் பெயர். (உத்தரோ கோபதிர் கோப்தா ஞானகம்ய: புராதன:, 53 விஷ்ணுசஹஸ்ர நாமம்). இந்த பவித்ரமான உத்தர என்னும் பெயருக்கு மிகவும் உயரமான கௌரவத்தை வைத்தார். உலகத்தில் எப்போதும் தத்வத்தை பரப்பி, அஞ்ஞானம் என்னும் இருட்டினை நீக்கும் இந்த திவ்ய பரம்பரை முன்னெடுத்து வளர்ந்து வந்தது.

உண்மையான சத்யவாதமான, எக்காலத்திற்கும் எந்த தேசத்திற்கும் பொருத்தமான இந்த வைஷ்ணவ சித்தாந்தம் இவ்வுலகில் எப்போதும் நிலைபெற்றிருப்பதற்கு பிரசாரம் தேவை. விஷ்ணு பக்தர்களான தேவதைகளினால், ரிஷி முனிவர்களினால் இத்தகைய பிரசாரம் மேற்கொள்ளப்பட்டு இந்த பரம்பரை வளர்ந்து வந்திருக்கிறது. பிரம்மாதி தேவதைகள் மற்றும் வாயு தேவரின் விசேஷ சன்னிதானமுள்ள தேவதைகள், ரிஷிகள் இந்த பரம்பரையை நடத்துபவர்களாயினர். ஜகத்தின் குருவானவர் பிரம்மன், சனக, சனந்தன, சனத்குமார, ருத்ரரின் அவதாரமான துர்வாசர், கருடவாகன தீர்த்தர், கைவல்ய தீர்த்தர், ஞானேச தீர்த்தர், பரதீர்த்தர், சத்யப்ரக்ஞ தீர்த்தர், ப்ராக்ஞ தீர்த்தர் ஆகியோர் இந்த பரம்பரையை அலங்கரித்தனர். அன்று கேலி பேசும், வெறுப்பு களைக் கக்கும் காலமாக இருந்தது. அத்வைதிகளால் இந்த சனாதன வைதிக தர்மத்திற்கு அதிக தொந்தரவுகள் வரத் துவங்கின. அப்போது இந்த பீடத்தை அலங்கித்திருந்தவர் ஸ்ரீ அச்யுதப்ரேக்ஷ தீர்த்தர்.

ஸ்ரீஹரியின் ஆணைப்படி, உடுப்பிக்கு அருகில் அவதரித்த வாயுதேவர், ஸ்ரீ அச்யுதப்ரேக்ஷரின் சிஷ்யராகி, பூர்ணப்ரக்ஞர் என்று பெயர் பெற்று சன்யாசி ஆனார். அவரது உத்தராதிகாரியாகி, அவரைத் தொடர்ந்து அந்த பீடத்தை அலங்கரித்து ஸ்ரீமத் ஆனந்ததீர்த்தர் என்ற பெயரைப் பெற்றார். வேத, உபநிஷத், பிரம்மசூத்ர, பகவத்கீதை, பஞ்சராத்ர, ராமாயண, மகாபாரத, அனைத்து புராணங்கள், தந்த்ரசாஸ்திரங்கள், பாஷ்ய, வியாக் யானங்களை நிறுவுதல் என்று மிகப்பெரிய ஒரு ஆன்மிகப் பிரபஞ்சத்தை நிறுவினார். இவையே சர்வமூல கிரந்தங்கள் என்று

பெயர் பெற்றன. அனைத்து சத்வ, மகத்வங்களை தன்னில் அடக்கிக்கொண்ட மிகச்சிறந்த த்வைததத்வமே இதுவாகும். இதுவே உலகத்தின் அடிப்படை சித்தாந்தம். இதுவே ஆசார்ய மத்வர் மனிதகுலத்திற்கு அளித்த ஒரு பாடம். சாஸ்திரங்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட, பிரமாணங்களால் நிரூபிக்கபட்ட, மிகவும் தூய்மையான வைஷ்ணவ சித்தாந்தம் இதுவே.

உடுப்பியில் ஸ்ரீகிருஷ்ணனை நிறுவி, அதை ஒரு க்ஷேத்திரமாக செய்ததுடன், மொத்த உலகத்தையே தமது சித்தாந்த பிரசாரத் திற்கான களமாக மாற்றினார். பாரதம் முழுக்க சுற்றுப்பயணம் மேற்கொண்டார். நாஸ்திகம், குருட்டு நம்பிக்கை, தவறான அறிவு ஆகியவற்றை கண்டித்தார். இந்த வைஷ்ணவ பிரசாரத்திற்காக பற்பல யதிகள், கிருஹஸ்தர்களை தயார் செய்தார். தமது தத்வத்தை போதிக்கும் பரம்பரையை முன்னெடுத்துச் செல்ல, இந்த மிகச் சிறந்த காரியத்தை மேலும் வளர்த்தெடுக்க, தம்முடனேயே விவாதித்து, தம் சித்தாந்தத்தை அறிந்து அதை ஒப்புக்கொண்ட சோபன பட்டரை தமது உத்தராதிகாரியாக நியமித்து ஸ்ரீபத்பனாப தீர்த்தர் என்று பெயரிட்டார்.

ஆசார்ய மத்வரின் சிஷ்யர்களில் முதலாமவர் ஸ்ரீபத்பனாப தீர்த்தரே. '**ஸ்ரீரகுவம்ச ஷேகரம் ஸ்ரீபத்பனாபாஹ்வய யோகி மௌலயே**' என்று அதனாலேயே வந்தது. அனைத்து யோகி யதிகளுக்கும் ஸ்ரீமூலராமரை ஸ்ரீபத்பனாப தீர்த்தரே வழங்கினார் என்பது நம்பிக்கை. தெற்கில் காவேரியிலிருந்து துவங்கி, நடுவில் கோதாவரி வரையிலான அனைத்து பிரதேசங்களுக்கும் குருவாக இருந்த ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீமத்வாசார்யரின் அருளுக்குப் பாத்திரராகி அவரிடமிருந்து வியாச முஷ்டிகளைப் பெற்றார். சாக்ஷாத் விஷ்ணு சன்னிதானம் உள்ள, சாலிகிராமத்தைப் போல இருக்கும் இவற்றை பெற்றவர்களில் ஸ்ரீபத்பனாப தீர்த்தரே முதலாமவர்.

**ய: கர்னாஅக பூர்வசஜ்ஜனெ குரு: ஸ்ரீபத்னபானாஹ்யய:**
**... ஏஷ ததௌ குரு: சதயிதோ விஷ்ணுஸ்திதோ யாசு தா:**

என்று பலிமார் மடத்தின் மூலபுருஷரான ஸ்ரீஹ்ருஷிகேச தீர்த்தர், தனது சம்பிரதாய பத்ததி கிரந்தத்தில் கூறியிருக்கிறார்.

*ஸ்ரீபத்பனாப தீர்த்தருக்குப் பிறகு இந்த பீடத்தை அலங் கரித்தவர் ஸ்ரீநரஹரி தீர்த்தர். ஸ்ரீ நரஹரி தீர்த்தர், ஸ்ரீமாதவ தீர்த்தர், அக்ஷோப்ய தீர்த்தர் ஆகியோருக்கு ஸ்ரீமத்வாசார்யர் தாமே சன்யாசத்தை வழங்கினார். அதுமட்டுமல்லாமல், இந்த நால்வரும் வரிசையாக தமது பரம்பரையின் உத்தராதிகாரிகளாகி இந்த பவித்ரமான பீடத்தை அலங்கரிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.*

*ஸ்ரீ நரஹரி தீர்த்தர், முதலில் கஜபதியின் அரசவையில் ஆந்திரா / ஒரிஸா பிரதேசங்களின் மகாமந்திரியாக இருந்தார். ஸ்ரீமத்வரிடமிருந்து சன்னியாசத்தைப் பெற்ற பிறகு, ஸ்ரீ நரஹரி தீர்த்தராகவே 12 ஆண்டுகாலம் கஜபதியின் ஆட்சியைப் புரிந்தார். அங்கிருந்து திரும்பி வரும்போது, குருகளின் ஆணைப்படியே அந்த அரசின் கருவூலத்திலிருந்து ஸ்ரீமூலராம, ஸ்ரீமூலசீதா தேவிகளின் பிரதிமைகளைக் கொண்டுவந்தார். ஸ்ரீஹம்ஸ நாமக ஸ்ரீஹரியே தனது சாக்ஷாத் ஸ்வரூபமான சச்சிதானந்த விக்ரகங் களை பிரம்மதேவருக்குக் கொடுத்திருந்தார். இது சாதாரணர்களுக்கு பிரதிமை போல் காணப்பட்டாலும், இவை சாக்ஷாத் லட்சுமி நாராயணரின் சச்சிதானந்த ஸ்வரூபங்களே ஆகும். இவற்றைக் கொண்டுவந்து ஸ்ரீமதாசார்யரிடம் ஒப்புவித்தார் ஸ்ரீ நரஹரி தீர்த்தர்.*

*இவருக்குப் பிறகு இந்த பீடத்தில் அமர்ந்தவரே ஸ்ரீமாதவ தீர்த்தர். நான்கு வேதங்களுக்கு பாஷ்யம் எழுதியவர். இவரது உத்தராதிகாரியானவரே ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர். ஆனேகொந்தி சம்ஸ்தானத்தின் ராஜகுருவாக இருந்தார். பீமா நதிக்கரையில் ஸ்ரீஹரியை அர்ச்சித்து, பூஜித்து மிகச்சிறந்த சிஷ்யரைப் பெற்றார். ஸ்ரீவித்யாரண்யரை தனது வாக்குவாதத்தில் வென்றார். இவரது சிஷ்யரே ஸ்ரீமத் ஜயதீர்த்தர். அத்யாத்ம உலகில் தலைசிறந்தவர். இளம்பருவத்திலேயே, அரசு, செல்வங்களைத் துறந்து, வீடு மனைவியை விட்டு விலகி, தனது பதினெட்டாவது வயதிலேயே மிகப்பெரிய வைராக்யசாலியாகி, ஞானசக்ரவர்த்தி என்றே அழைக்கப்பட்டவர் ஸ்ரீஜயதீர்த்தர். ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங் களுக்கு டீகை எழுதிய டீகாசார்யர். ஸ்ரீமன் நியாயசுதா இவரது தலைசிறந்த கிரந்தம். காகினி நதிக்கரையில், மலகேடவில் குருவான ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தரின் அருகில், ஏற்கனவே நிர்மாணித்திருந்த பிருந்தாவனத்தில் பிரவேசித்தவரே ஸ்ரீஜயதீர்த்தர்.*

காசியில் ஸ்ரீஜயதீர்த்தரிடமிருந்து சன்யாசம் பெற்றவர்களில், த்வைத நகாரியை இசைத்தவரே ஸ்ரீவித்யாதிராஜதீர்த்தர். ஸ்ரீவித்யாதிராஜரின் முதலாம் சிஷ்யராக இருந்த ஸ்ரீராஜேந்திர தீர்த்தருக்கு முன்னால், மூல பரம்பரையின் யதிகள் என்று கௌரவிக்கப்பட்டவர் ஸ்ரீகவீந்த்ர தீர்த்தர். அவரின் சிஷ்யரே ஸ்ரீவாகீச தீர்த்தர். அவர் ஸ்ரீராமசந்திர தீர்த்தரை, தனது உத்தராதி காரியாக நியமித்தார். இவர் தமது தவம், பக்தியின் மூலம், பூமியில் புதைந்திருந்த மூலராம பூஜைப்பெட்டியை மேலே கொண்டு வந்தவர். ஸ்ரீமதாசார்யரின் இந்த உத்தராதி மகா சம்ஸ்தானமே, ஸ்ரீமூலராமன் நிலைகொண்டிருக்கும் நிரந்தரமான இடம் என்று நிறுவினார்.

பிறகு வந்த ஸ்ரீரகுநாததீர்த்தர் மிகச்சிறந்த ஞானிகள். கொப்பர க்ஷேத்திரத்தில் ஸ்ரீவிபுதேந்திரரின் எதிரில், அவரது சிஷ்யரான ஸ்ரீலட்சுமிநாராயண யதிகளின் திறனை சோதித்து, அவரது பாண்டித்யத்தை அறிந்து, 'தாங்கள் ஸ்ரீபாதரும் ஆவீர், ராஜரும் ஆவீர். இன்றிலிருந்து ஸ்ரீபாதராஜர் என்று அழைக்கப்படுவீர்' என்று ஸ்ரீபாதராஜரின் தலை மேல் பூக்களைத் தூவி அருளினார். 300 யதிகளுக்கு பாடம் எடுத்தவர் இவர். கூர்மரூபத்தில் இருந்த வேதவியாசரைப் பெற்றவர். இவரது சிஷ்யரே ரகுவர்யர். பாய்ந்து ஓடிய பீமா நதி, இவருக்கு வழி விட்டு சற்று விலகி ஓடியது. இவரது உத்தராதிகாரிகளே பாவபோதகாரரான ஸ்ரீரகூத்தமர்.

பற்பல டீகா டிப்பணிகளை இயற்றியவர். இன்றைக்கும் திருக்கோவிலூர் மூல பிருந்தாவனத்தில் இருந்து அனைவருக்கும் அருள்பவர். இவரது சிஷ்யரே பெனுகொண்டாவில் இருக்கும் ஸ்ரீவேதவியாச தீர்த்தர். பெரும் தபஸ்வி. இவரின் சிஷ்யரே ஸ்ரீவித்யாதீச தீர்த்தர். 'வியாக்யார்த்த சந்திரிகா' இயற்றியவர். பிரம்மமானஸ புத்ரர் என்று அழைத்துக்கொண்ட, கமாவாடரை மாத்வராக மாற்றி, அவர் இன்றைக்கும் உத்தராதி மடத்து சிஷ்யராக இருக்குமாறு செய்தவர். இவரது சிஷ்யரே வேதநிதி தீர்த்தர்.

இவர் பண்டரிபுரத்தில் இருந்தபோது இவரைக் காண்பதற்கு ஸ்ரீராகவேந்திரரே வந்திருந்தார். இருவரும் ஒன்றாக பல நாட்கள் ஒரே இடத்தில் வாசம் செய்தனர். இவருக்குப் பிறகானவரே ஸ்ரீசத்யவிரதர். சாங்க்லியில் உயிருடன் பிருந்தாவன பிரவேசம்

செய்தவர். பிறகு வந்தவர் சத்யசந்தர். இவரது பிருந்தாவனத்திற்கு எதிரில் ஸ்ரீமன் நியாயசுதா அனுவாதம் செய்தபோது, பிருந்தா வனத்திலிருந்து தலை ஆட்டியவர். மொத்த பிருந்தாவனமும் ஆடியது. இவரது சிஷ்யரான ஸ்ரீசத்யநிதி தீர்த்தர், கலியுக கல்ப விருக்ஷ காமதேனு என்று அழைக்கப்பட்டார். இவரது உத்தராதி காரிகளே, பஞ்ச அபினவகாரர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீசத்யநாத தீர்த்தர். இவருக்குப் பிறகு, பற்பல கிரந்தங்களை இயற்றிய ஸ்ரீசத்யாபினவ தீர்த்தர் பீடத்தில் அமர்ந்தார். ஸ்ரீசத்யபூர்ணர், ஸ்ரீசத்யவிஜயருக்குப் பிறகு, ஸ்ரீசத்யப்ரியர் பீடத்திற்கு வந்தார். இவரது வரலாறே 'பிரசண்டராஹோதய' என்னும் நாடக ரூபத்தில் கனஷ்யாம என்பவரால் எழுதப்பட்டது.

இவரது சிஷ்யரே, இரவில் சூரியனைக் காண்பித்த ஸ்ரீசத்யபோத தீர்த்தர். இவரது பெயரில் நாணயங்கள் வழக்கில் இருந்தன. 14 ஹரிதாசர்களுக்கு வழிகாட்டியாக இருந்தவர். இவரது சிஷ்யரே மஹிஷியில் பிருந்தாவனஸ்தர் ஆகியிருக்கும் ஸ்ரீசத்யசந்தர். பண்டரிபுரத்து பாண்டுரங்கனின் தரிசனத்தைப் பெற்றவர். குருவிடமிருந்து பத்து ஆண்டுகள் ஆயுள் தானம் பெற்றவர். இவரது உத்தராதிகளாக வந்தவர் ஸ்ரீசத்யவரர் மற்றும் இவருக்குப் பிறகு ஸ்ரீசத்யதர்மர் பீடத்தை அலங்கரித்தார். இவரே பாகவதத்திற்கு மிகச்சிறந்த உரையை எழுதிய கவி ஆவார். மைசூர் அரசரின் ராஜகுருவாக இருந்து, மைசூரிலேயே பிருந்தாவனத்தில் பிரவேசித்தவர் ஸ்ரீசத்யவரரின் சிஷ்யரான ஸ்ரீசத்ய சங்கல்பர். இவருக்குப் பிறகு, மூன்று மடத்து நூற்றுக்கும் மேற்பட்ட வித்வாம்சர்களுக்கு பாடம் எடுத்த ஸ்ரீசத்ய சந்துஷ்டர் பீடத்திற்கு வந்தார்.

பாஜிராவ் அரசரின் ராஜகுருவாகி, தேசத்தில் த்வைத சித்தாந்தத்தைப் பரப்பியவரே ஸ்ரீ சத்யபராயணர். தமது தவத்தினால் பற்பல மக்களுக்கு அருளிய ஞானிகளே ஸ்ரீசத்யகாம தீர்த்தர். இவருக்குப் பிறகு, ஸ்ரீசத்யேஷ்டர் பீடத்தை அலங்கரித்தார். ஸ்ரீசத்யேஷ்டரின் சிஷ்யரே ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர்.

# ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர்

## (கிபி 1841லிருந்து 1879)

*தன் பெயருக்கேற்ப பராக்ரமத்துடன் விளங்கியவர் ஸ்ரீசத்ய பராக்ரமர். அற்புதமான பண்டிதர். அபாரமான புகழ். அசாதாரண மான ஆளுமையுடன் வேதாந்த சாம்ராஜ்யத்தில் சத்யமான பராக்ரமம் பெற்று மிகச்சிறந்த ஞானம் பெற்றவர். அந்த நூற்றாண்டிலேயே இத்தகைய பாண்டித்யம், வாக்யார்த்த திறமையைப் பெற்றவர்களில் தலைமையானவர் என்று அழைக்கப்படுபவர்.*

*மகாராஷ்ரத்தில் கிருஷ்ணா நதிக்கரையில் 'வாயே' இவரது மூதாதையர் இருந்த இடம். அங்கிருந்து அவர்கள் நெடுங் காலத்திற்கு முன்னரே கர்னாடகத்திற்கு வந்து தங்கினர். கதக்'கிற்கு அருகில் மரடூர் கிராமத்திலிருந்த பண்டிதர் பாளாசார்யர் மற்றும் கோதாபாய் தம்பதிகள், தங்கள் வீட்டிலேயே நிரந்தர பாடசாலை நடத்தி, நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்களுக்கு பாடம் கற்பித்து, நித்ய அன்னதானம் செய்துவந்தனர். ஒருமுறை ஸ்ரீமுஷ்ணத்தின் ஆர்யாசார்யர், பாளாசார்யரின் அதிதியாக வந்து, 'உங்களுக்கு தெய்வாம்சத்துடன் ஒரு மகன் பிறப்பான்' என்று ஆசிர்வதித்தார்.*

*அடுத்த ஒரு ஆண்டுக்குள்ளாகவே, மிகவும் அழகான ஒரு குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு ஸ்ரீனிவாசன் என்று பெயரிட்டனர். இவரே வாயே ஸ்ரீனிவாசாசார்யர். (பின்னர் ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர்).*

*தந்தையான பாளாசார்யரிடமே ஸ்ரீனிவாசாசார்யர், நியாய, வியாகரண, வேதாந்தம் முதலான சாஸ்திரங்களை படித்தார். ஹர்லாபுரத்து கணக்காயரின் மகளுடன் இவருக்கு திருமணம் நடைபெற்றது. தந்தை மறைந்தபிறகு, தன் தம்பிகளுக்கு*

ஸ்ரீனிவாசாசார்யரே பாடம் சொல்லிக் கொடுக்கத் துவங்கினார். அன்றைய நாட்களிலேயே சிறந்த பாண்டியத்திற்குப் பெயர் பெற்றார். எத்தகைய தலைசிறந்த பண்டிதர் செய்த வாக்குவாதத் திற்கும், சரியான எதிர்வாதம் / பதில் கொடுப்பவராக இருந்தார். இவரது அசாதாரண ஆளுமையைக் கண்டு அன்றைய பல பீடாதிபதிகள் பல்லக்கு, அகல்விளக்கு, வெண்குடை என மேலும் பல பரிசுகளை வழங்கி வந்தனர்.

நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்களை அழைத்து, இவர் செய்யும் பயணம், பீடாதிபதிகள் செய்யும் சுற்றுப்பயணத்தைப் போலவே இருந்தது. கத்வால் சம்ஸ்தானத்தில், பண்டிதர்களின் சபையில் இவரது வாக்யார்த்தம், வாதத் திறமை, பாண்டித்யம், ஆளுமை ஆகியவற்றைக் கண்ட மகாராஜா இவருக்கு பெரும் மரியாதையைக் கொடுத்தார். மூன்று ஆண்டுகள் ஹைதராபாத்தில் பாடம் சொல்லிக் கொடுத்து அங்கேயே தங்கியிருந்தார். நவாப் மஹபூப் உத்தௌலா மற்றும் திவான் சாலார்ஜங் ஆகியோர் இவரின் திறமையைக் கண்டு இவருக்கு சித்தாபுர, மல்லாபுர, சிகானூர் என இந்த மூன்று கிராமங்களை தானமாக வழங்கினார். இது மட்டுமல்லாமல் 2000 ஏக்கர் பூமியையும் வழங்கினார். மேலும் 1000 ரூபாய்களையும் ஆண்டுத்தொகையாக வழங்கி வந்தார். இவர் ஹைதராபாத்தில் பரவிவந்த காலரா நோயினை தீர்த்து வைத்தார். சித்தாபுரத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட சிஷ்யர் களை வைத்துக் கொண்டு, பாட பிரவசனங்களை செய்து, அங்கேயே வாசம் செய்தார்.

பூர்வாசிரமத்திலேயே ஹத்திமத்தூர நரசிம்மாசார்யர் என்று புகழ்பெற்றிருந்த ஸ்ரீசத்யேஷ்ட தீர்த்தர், பரமஹம்ஸ பீடத்தில் வீற்றிருந்தார். அவருக்கு இந்த ஸ்ரீனிவாசாசார்யரின் அறிமுகம் துவக்கத்திலிருந்தே இருந்தது. அங்கிரஸ சம்வத்ஸரம் பாத்ரபத தசமியன்று, இந்த வாயி ஆசார்யரை அழைத்து அவருக்கு சன்யாசம் அளித்து ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர் என்று பெயரிட்டார். குருகளிட மிருந்து தக்க பெயரைப் பெற்றவர் இவர். ராய்ச்சூர், தார்வாட ஆகிய பிராந்தியங்களில் சஞ்சரித்து வந்தார். இவரிடம் படித்த பண்டிதர்கள் என்றால் கொர்லஹள்ளி போதராசார்யர், கனகபண்டி ஹ்ருஷ் டாசார், ஹானகல் பீமாசார், ஸ்ரீபாதபுத்ர பீமபாளாசார், ஜமகண்டி வாதிராஜாச்சார், கொடங்கல் வெங்கப்பாசார், (பின்னர் கூடலி

அக்ஷோப்ய தீர்த்த சம்ஸ்தானத்திற்கு அதிபதியாகி ஸ்ரீரகுகாந்த தீர்த்தர் என்று அழைக்கப்பட்டார்) ஆகியோர்.

ஸ்ரீசத்யபராக்ரமரின் பாடம் மிகச் சிறந்து புகழ்பெற்று விளங்கியது. ஸ்ரீமன் நியாயசுதா, வேதாந்த கிரந்தங்களை அனுமானம், அலங்காரம் செய்து புதிய முறையில் ஒரு நவீன பத்ததியையே துவக்கினார். ஸ்ரீசத்யபராக்ரமரின் இந்த பன்முக பாண்டித்யம், புகழ், தவம் ஆகியவற்றைக் கண்டு சாலார்ஜங் நவாப் மிகவும் வியப்படைந்தார். ஸ்ரீகளவரின் வாக்கு வன்மை, ஆளுமை, பல மொழிகளில் பிரவாகமான சொற்பொழிவு ஆற்றும் திறன், வேதாந்தத்தைப் போல லௌகீக விஷயங்களிலும் அவருக்கு இருக்கும் அறிவு, அனுபவம் ஆகியவற்றைக் கண்டு, நவாப் மற்றும் அவரின் திவானாக இருந்த ஷிவராஜ் பஹாத்தூரர், இவருக்கு மேலும் சில கிராமங்களை தானமாக அளித்தார். ஷாலி பண்டாவில் மடத்தை நிறுவி, அங்கு பிராணதேவரை நிர்மாணித்தார். அங்கிருந்து குல்பர்காவிற்கு வந்து அங்கு பல நாட்கள் தங்கியிருந்தார்.

1875-76ல், ஸ்ரீகளவர் புனேயில் இரு ஆண்டுகள் தங்கி யிருந்தார். பாடம், பிரவசனம், வாக்யார்த்தங்களை நடத்தி மகாராஷ்டிரத்தில் த்வைத சித்தாந்தத்தை பிரசாரம் செய்தார். அந்த ஆண்டு புனே நகரத்தில் கடுமையான பஞ்சம் நிலவியது. மக்களுக்கு ஒரு வேளை உணவு கிடைப்பதே மிகவும் அரிதாக இருந்தது. ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர், ஊரில் பல இடங்களில் அன்னசத்திரத்தை திறந்தார். தினமும் ஸ்ரீமடத்தில் பல்லாயிரம் மக்களுக்கு அன்னதானம் நிரந்தரமாக நடந்தது. அதனால், புனே மக்கள் அனைவரும் ஸ்ரீகளவரின் கருணை, அன்பு ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்து அவருக்கு நன்றி கூறினர்.

புனேவில் முரளிதர ஆலயத்தில் சுமார் 14 நாட்கள் வரை, த்வைத அத்வைத வாக்யார்த்த சபை ஏற்படுத்தி, அங்கு பாரதத்தின் பல இடங்களிலிருந்து பண்டிதர்களை வரவழைத்தார். அந்த நாட்களில், ஸ்ரீசத்யபராக்ரமரின் இந்த சபை, நாட்டின் பல இடங்களில் இருந்த பண்டிதர்களை ஈர்த்தது. அதுவே அவர்களது விருப்பமான சபையாக இருந்தது. அவர்கள் தங்களின் திறமையை மற்றவர்களுக்கு எடுத்துக்காட்ட ஒரு அற்புதமான தகுந்த சபையாக

இருந்தது. நியாய, வியாகரண, வேதாந்தம் ஆகிய அனைத்திலும் ஸ்ரீகளவரின் அபாரமான ஆளுமை, வாதத் திறமை அனைவரையும் மிகவும் கவர்ந்தது. புனேவில் ஸ்ரீகளவர், த்வைத மடத்தின் வெற்றிக் கொடியை நிலைநாட்டினார். ஊரின் முக்யஸ்தரான தாதா சாகேப் கோட்போலே, கர்ஹாடகர், கைராடகர், நீலங்கேகர் முதலானவர்கள் ஸ்ரீசத்யபராக்ரமரிடமிருந்து தப்த முத்ராதாரணை பெற்று மாத்வ தீக்ஷை பெற்றனர். பின்னர் ஹைதராபாத் நகரத்தில் பயணம் செய்தபோது, சொன்னி'யில் சாதுர்மாத விரதத்தை மேற்கொண்டார். அங்கு பிராணதேவரை பிரதிஷ்டை செய்தார்.

படோதேவின் வித்வத் சபையில் அனைவரையும் வாக்யார்த் தத்தில் வென்று, வந்திருந்த அனைத்து முக்கிய பண்டிதரிடமும் வெற்றிப் பத்திரத்தையும், அரசரிடமிருந்து மான பத்திரத்தையும் பெற்று, இப்படிச் செய்த ஒரே சம்ஸ்தானாதிபதியானார் ஸ்ரீசத்ய பராக்ரம தீர்த்தர்.

அன்றைய நாட்களில், மொத்த பாரதத்திலேயே வேதாந்த சாம்ராஜ்யத்தில் ஸ்ரீசத்யபராக்ரமருக்கு சமமான பண்டிதர், யதிகள் என யாரும் இருக்கவில்லை. ஸ்ரீமன் நியாயசுதா, வியாச த்ரயங் களுக்கு, உரை கிரந்தங்களை எழுதியிருக்கிறார். மத்வமதத்தின் வரலாற்றிலேயே புதிய முறையைக் கொண்டு வந்த வித்யா சக்ர வர்த்தி, உத்தர என்னும் ஸ்ரீஹரிபீடத்தின் இந்த ஸ்ரீ சத்யபராக்ரமர்.

இத்தகைய யதிசார்வபௌமரின் பண்டிதகுல சன்னிதியில், அனைத்து சாஸ்திரங்களையும் படித்து, அவரின் மனம் மகிழுமாறு பாண்டித்யம் பெற்று, அவரின் அன்பிற்கு பாத்திரராகி, அவருக்கு மிகவும் பிடித்த குழந்தையாக, அவரிடமிருந்தே சன்யாசம் பெற்று, அவரின் உத்தராதிகாரியாகி, அவரது உத்தராதி பீடத்தை அலங் கரித்தவரே ஸ்ரீஸ்ரீ சத்யவீரர். ஸ்ரீசத்யபராக்ரமருக்கு பாண்டித்யம், பாட பிரவசனம், வாக்யார்த்தம், வாதிகளை எதிர்த்தல், கிரந்தங் களை எழுதுதல், அன்னதானம், சன்யாச ஆசிரமத்தை நடத்துதல், தேசத்தில் சுற்றுப்பயணம் முதலான அனைத்து வேலைகளிலும் உதவி செய்து, தம்மைப் போலவே நடந்து, இந்த பழமையான பரம்பரையை சரியாக நடத்துவார் என்ற நம்பிக்கையை தனது குருவிற்குக் கொடுத்தவரே ஸ்ரீ சத்யவீரர். இவரே பூர்வாசிரமத்தில் கொர்லஹள்ளி போதராஜாசார்யர். ஸ்ரீசத்யபராக்ரமரின் சிஷ்யரான இளவரசர்.

## ஸ்ரீசத்யவீரரின் பூர்வாசிரமம்

*ஸ்ரீசத்யவீரரின் பூர்வாசிரமத்தின் வம்சம் - கொர்லஹள்ளி. (கண்டபள்ளி). துவக்கத்திலிருந்தே பெரும் பண்டிதர்களைக் கொண்ட வம்சம் இது. உத்தராதி மடத்தின் பரம்பரைக்கு மூன்று யதி வரேண்யர்களைக் கொடுத்த வம்சம். ஸ்ரீசத்யவீரர், ஸ்ரீசத்யதீரர் மற்றும் ஸ்ரீசத்யத்யான தீர்த்தர் ஆகியோரே அவர்கள். இந்த மூவரும் மொத்தமாக 56 ஆண்டுகள் சாம்ராஜ்ய பீடத்தில் இருந்தனர். இவர்கள் பீடத்தில் இருந்த இவ்வளவு ஆண்டுகளை மத்வ மதத்தின் பொற்காலம் என்றே சொல்லலாம். கலியுகத்தை இவர்கள் கிருதயுகமாகவே மாற்றினர். பாரதிய சனாதன வைதிக கலாச்சாரம் மற்றும் தத்வஞானத்தை காப்பாற்றி வளர்த்தனர் இவர்கள்.*

*துங்கா தீரத்தில் பவித்ரமான சூழ்நிலையில் இருக்கிறது கொர்லஹள்ளி. அங்கு ஜனமேஜய ராஜனால் நிர்மாணிக்கப்பட்டு பூஜிக்கப்பட்டவர் மதலகட்டத்தின் முக்யபிராணர். அவர் அனைவருக்கும் பிரியமானவர். துங்கா நதிக்கரையில் பிதரஹள்ளி, கொரலஹள்ளிகளின் புனிதத்தை, தீர்த்தபிரபந்தத்தில் ஸ்ரீவாதிராஜர் வர்ணித்திருக்கிறார். இந்த கொர்லஹள்ளியில் பல பண்டிதர்கள் இருந்தனர். அனைவரின் வீடும் ஒரு குருகுலமாகவே இருந்தது. நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்கள் நிரந்தர வேத அத்யயனம், பாட பிரவசனம் ஆகியவற்றை செய்து வந்தனர்.*

*கொர்லஹள்ளி பண்டிதர்களில் ரகுநாதாசார்யர் மிகவும் முக்கியமானவர். ஸ்ரீமத் உத்தராதி மடத்தின் பீடாதிபதியான ஸ்ரீசத்யநாத தீர்த்தரின் பூர்வாசிரம மாப்பிள்ளை. இவர் ஹுலிகீ ஸ்ரீய:பதி ஆசார்யருக்கு பரமகுருவாவார். வெள்ளை ஆடை அணிந்த ஜகத்குருவாக இருந்தார். பெரும் பண்டிதர். ஹுலிகெ ஸ்ரீய:பதி ஆசார்யர் சிறந்த ஞானி ஆவார். தத்வோத்யோதத்திற்கு த்வைத-த்யுமணி என்னும் கிரந்தத்தை, மிகச்சிறந்த நடையில் உரையுடன் இயற்றினார். சமஸ்கிருதத்திலேயே பற்பல தேவர நாமாக்களை இயற்றினார். இத்தகைய ஹுலிகீ ஆசார்யர், தமது பரமகுருவான கொர்லஹள்ளி ரகுநாதாசார்யரை தமது கிரந்தத்தின் துவக்கத்தில் மிகவும் அழகாக வணங்கியிருக்கிறார்.*

துர்வாதிவ்ராத மாத்யத் கரி வரதமனோத்தாம பஞ்சாஸ்ய லீலா ।
மாதன்பன் மோததீர்த்தாகமகஹன பயோராசி மந்தாசலஸ்ரீ: ॥
விக்யாத: கண்டபல்லி ஸ்தலவர வசதி: ஸ்ரீரகூத்தம்சனாமா ।
தத்யாத்பாகர்த்தபேதம் மம பரமகுரு: கிரந்தமேனம் விதாதும் ॥
கண்டபல்லி வரக்ராம வாசினம் விதுஷம் வரம் ।
ரகுநாதார்ய நாமானம் பரமம் குருமாஸ்ரயே ॥

**(பிரமாண பத்ததி டிப்பணி) ஹூலிகி நரசிம்மாசார்யர்**

*இவரே கொர்லஹள்ளி வம்சத்தின் மூலபுருஷர். இந்த ரகுநாதாசார்யர் அத்ரி கோத்ரத்தவர். இவரது மனைவி பாரதிதேவி. இவரது இல்லமே பெரிய வித்யாபீடமாக இருந்தது. வீட்டில் மாணவர்களின் கூட்டம். நிரந்தர பாடங்களின் ஏற்பாடு. இந்த புண்ணிய புருஷரான ரகுநாதாசார்யருக்கு பஞ்ச பாண்டவர்களைப் போல ஐந்து பேர் ஆண் வாரிசுகள். 1. அப்பைய்யாச்சார் 2. ஆனந்த தீர்த்தாச்சார் 3. யதுநாதாச்சார் 4. மதுசூதனாச்சார் மற்றும் 5. குருராஜாச்சார். இந்த ஐந்து பேரும் பெரும் பண்டிதர்களே. தந்தையிடமே பாடம் படித்தவர்கள். மிகப் பெரிய குடும்பம். மூத்த மகனான அப்பைய்யாச்சார், பாட பிரவசங்களுக்காக கோகாக என்னும் ஊருக்கு வந்து தங்கியிருந்தார். அவரின் தம்பியான ஆனந்ததீர்த்தாசாரியரின் மகனே கிருஷ்ணாச்சார். இவர் பாட பிரவசனங்களுக்காக சிக்கூடு என்னும் ஊருக்கு வந்து தங்கி யிருந்தார். இந்த கிருஷ்ணாசார்யரின் மக்களே கொர்லஹள்ளி ஜயாச்சார்யர் (ஸ்ரீசத்யதீர தீர்த்தர்). இந்த ஜயாச்சார்யரின் மக்களே சேதுராமாச்சார் (ஸ்ரீசத்யத்யான தீர்த்தர்).*

## பிறப்பு மற்றும் இளமைக்காலம்

*பூஜ்ய ரகுநாதாசார்யரின் இரண்டாவது மகனான ஆனந்த தீர்த்தாச்சார் பாட பிரவசனத்திற்காக கோகாக-வில் தங்கியிருந்தார். இவரது மகனே அண்ணையாச்சார். சிறந்த பண்டிதர். இவரது மகனே பாளாச்சார். இவரை பாபாச்சார்யர் என்றும் அழைத்தனர். இவரும் பெரும் பண்டிதரே. தினமும் மகா மந்திரங்களின் ஜெபம், சுதாதி கிரந்தங்களின் பாடம், பிரவசனம் தவறாமல் செய்து வந்தார். தார்மிக சிந்தனை உள்ளவர். இத்தகைய வித்வாம்சருக்கும் ஒரு குறை இருந்தது. ஒரு சிறந்த, ஞானியான மகன் இல்லையே என்னும் குறை. தமது பாட, பிரவசன பரம்பரை மேலும்*

வளர்வதற்கு, சத்புத்ரன் ஒருவன் பிறக்கவேண்டுமே என்று அவர் நினைத்தது சகஜமே. இந்த தம்பதிகள் பற்பல விரத நியமங்களை செய்து வந்தனர். பூஜை, பாராயணம், பிரவசங்களை செய்து வந்தனர். ஆனாலும் வேண்டிய பலன் கிடைக்கவில்லை.

அப்போது பாளாசார்யருக்கு ஒரு நாள் ஒரு கனவு தோன்றியது. பெரிய தாத்தாவாகிய ரகுநாதாசார்யரே இவரது கனவில் வந்து ‘சாவனூரில் நிலைத்திருக்கும் ஸ்ரீசத்யபோதர் மகாபுருஷர். தபஸ்வி. உண்மையான ஜகத்குருவானவர். நடு இரவிலும் சூரியனைக் காட்டியவர். ஸ்ரீசத்யசந்தர், ஸ்ரீதீரேந்திரர், ஸ்ரீவரதேந்திரரால் கௌரவிக்கப்பட்டவர். ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீஜகன்னாததாசர் ஆகியோருக்கெல்லாம் தத்வோபதேசம் செய் தவர். அத்தகைய சிறப்பு மிக்க ஸ்ரீசத்யபோத தீர்த்தருக்கு சேவை செய்யவும். உங்களின் இஷ்டார்த்தம் நிறைவேறும்’ என்றார்.

பாளாச்சார், மதலகட்டிற்கு வந்து பிராணதேவரின் தரிசனம் செய்து, அவரின் அனுமதியைப் பெற்று சாவனூருக்கு வந்தார். ஸ்ரீசத்யபோதரின் திவ்ய பிருந்தாவனத்தின் தரிசனத்தைப் பெற்றார். பிருந்தாவனத்தின் தரிசனத்தைப் பெற்றதுமே, ஆண் குழந்தை பெற்றதைப் போல மகிழ்ச்சியடைந்தார். மதலகட்டின் முக்ய பிராணர், தானும் சாவனூர் சத்யபோதரிடம் வந்து சேவை பெற்றுக்கொள்வேன் என்று சொன்னது நினைவுக்கு வந்து, பக்தி மேலும் அதிகரித்தது. தினமும் விஷ்ணு தீர்த்தத்தில் ஸ்னானம், பூஜை, பாராயணம், பிரதிக்ஷிணை, நமஸ்காரம் என தம்பதிகள் சேவை செய்தனர். இப்படியே பல நாட்கள் செய்தனர்.

காலம் கனிந்தது. சேவை ஒரு கட்டத்தில் முடிவடைந்தது. ஸ்ரீசத்யபோத தீர்த்தர் கனவில் வந்து அருளினார். ’உமக்கு சிறந்த மகன் ஒருவன் பிறப்பான். அவன் மிகப்பெரிய ஞானியாகி, இந்த பரமஹம்ஸ மகாபீடத்தை அலங்கரிப்பான். உலகப்புகழ் பெற்று, உமது மகன், உமது குலத்திற்கே நற்பெயர் பெற்றுத் தருவான்’ என்று சொல்லி மறைந்தார். பாளாசார்யருக்கு மிகவும் ஆச்சரியம் உண்டாயிற்று. மனைவியிடம் கனவினை தெரிவித்தார். அன்றைய தினமே உணவிற்குப் பிறகு, பாளாச்சார்யர், தமது இருப்பிடமான கோகாக-விற்கு திரும்பினார்.

வந்து ஒரு ஆண்டு ஆகியிருக்கவில்லை. பாளாச்சார்யர் தம்பதியினருக்கு ஒரு சிறந்த மகன் பிறந்தான். ஆண்டு 1840 சிராவண சுத்த த்வாதசியன்று இவர்களுக்கு ஆண் குழந்தை பிறந்தது. நல்ல முகூர்த்தத்தில் பிறந்த இந்த குழந்தையைக் கண்டு அனைவரும் மகிழ்ச்சியடைந்தனர். அந்த குழந்தைக்கு 'ஸ்ரீசத்யபோத' என்றே பெயர் வைத்தனர். ஆனால் அனைவரும் 'போத', 'போதராசார்ய' என்று அழைத்தனர். சேவை, தவத்தின் பலனாக பிறந்த குழந்தையாததால், பிறந்தது முதலே அக்குழந்தை சாத்விக தேஜஸ்ஸினைக் கொண்டிருந்தது. முகத்தில் ஒளி பரவியிருந்தது. ஸ்ரீசத்யபோதரின் அருளினாலேயே இந்த குழந்தை வளர்ந்து வந்தது. பாலலீலைகளைக் காட்டியவாறு, போதராசார்ய வளர்ந்து பெரியவனானான். அந்தந்த காலங்களில் செய்யவேண்டிய சம்ஸ்காரங்களை செய்தனர். உபநயனம் ஆயிற்று. வேத சாஸ்திரங்களின் பாடத்திற்காக தகுதி பெற்றான்.

போதரின் உடற்கட்டு அழகு. வசீகரிக்கும் ஆளுமை. விசாலமான முகம். தலையில் குடுமி என்று இவரைப் பார்த்தவர்களுக்கெல்லாம் இவர் மேல் மரியாதை உண்டாயிற்று. 14 வயதாகும்போதே போதராசார்யர் வேத, நியாய, வியாகரண, சாகித்யங்களில் அற்புத திறமையை / பாண்டித்யத்தை பெற்றிருந்தார். கல்விக்காக மதலகட்டி பிராணதேவரை மிகவும் விசேஷமாக உபாசனை செய்தார்.

தார்வாடில் ஒரு பெரிய வித்வத் சபை. மூன்று மடத்திலிருந்தும் நூற்றுக்கும் மேற்பட்ட பண்டிதர்கள் நிறைந்திருந்தனர். அந்த பண்டிதர்கள் கேட்ட கேள்விகளுக்கு இந்த 14 வயதே ஆன போதராசார்யர், சமஸ்கிருத ஸ்லோகத்தாலேயே பதில் அளித்தார். நான்கு சாஸ்திரங்களிலும் விற்பன்னர்களான பண்டிதர்கள் கேட்ட கேள்விகளுக்கு, இவர் அளித்த பதில்கள் அனைவரையும் வியப்புக்குள்ளாக்கியது. சிறிய உருவத்தில், த்ரிவிக்ரமனைப் போல பாண்டித்யத்தைக் கண்டு அனைவரும் மெய் மறந்தனர். மகிழ்ச்சி அடைந்தனர். அந்த சபையே இவருக்கு 'அபினவ காளிதாச' என்னும் பட்டத்தைக் கொடுத்து மகிழ்ந்தது.

மேலும் வளர்ந்த போதராசார்யர், பதினெட்டாம் வயதில் காலடி வைத்தார். முகத்தில் பிரம்ம தேஜஸ். ஆஜானுபாகுவான

தேகம். அபூர்வமான ஆளுமை. தகுந்த ஒரு பெண்ணுடன் ஆசார்யருக்கு திருமணம் நடந்தது. திருமண வாழ்க்கை மகிழ்வுடன் நகர்ந்தது. பாட பிரவசனம் தடையின்றி நடந்தன.

போதாசார்யரின் வாழ்க்கை ஒரு புதிய திருப்பத்தை அடைந்தது. வீட்டிற்கு படிக்க வரும் மாணவர்களின், பண்டிதர்களின் எண்ணிக்கை கூடியது. இவரது புகழைக் கேட்டு, இவரை பார்க்க வருபவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது. வரும் அனைவரும் தங்குவதற்காக, அதே கோகாக-வில் ஒரு பெரிய வீட்டினைக் கட்டினார். அந்த வீட்டின் நுழைவாயில் மிகப் பெரியதாக இருந்தது. பட்டத்து யானை வீட்டிற்குள் போய் வருமாறு பெரியது. அதைப் பார்த்த பெரியவர் ஒருவர் - 'என்ன ஆசார்யரே? யானை அம்பாரியுடன் உள்ளே போய் வருமாறு இந்த வீட்டின் வாயில் இவ்வளவு பெரியதாக உள்ளதே?' என்றார். போதாசார்யர் புன்னகை செய்தார். 'சந்தர்ப்பம் வந்தால் யானையும் வரும். அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பமே' என்றார்.

அதைப் போலவே, இதே கொர்லஹள்ளி ஆசார்யர், முன்னர் ஸ்ரீமத் உத்தராதி மடாதீசராகி பீடத்தில் அமர்ந்தபோது, திக் விஜயத்தில் தாம் முன்னர் வசித்த இதே வீட்டிற்கு யானையில் ஏறி, இதே பெரிய வாயிலைக் கடந்து உள்ளே வந்தார். அன்று முன்பு சொன்ன அந்த வாக்கு உண்மையாயிற்று. அறிஞர்களின் பார்வையே தனி. அவர்கள், ஸ்ரீஹரியின் விருப்பப்படி பேசும் பேச்சுக்களின் பின்புலமே தனி. இயற்றும் கிருதிகளின் பின்புலமே தனி. சாதாரண மக்களுக்கு அது என்றும் புரியக்கூடியதல்ல.

போதராசார்யருடையது உத்தமமான கிருஹஸ்த வாழ்க்கை. தினமும் மூன்று வேளை குளியல். ஹரிவாயுகளின் உபாசனை. பற்பல கிரந்தங்களின் பாட பிரவசனம், மாணவர்களுக்கும், அதிதிகளுக்கும் அன்னதானம் - இவையே இவரது தினப்படி செயல்களாக இருந்தன. திருமணமாகி 6-7 ஆண்டுகள் ஆகியிருந்தாலும், வீட்டு பெரியவர்களுக்கு ஒரு குறை இருந்தது. இன்னும் இந்த தம்பதிகளுக்கு ஒரு வாரிசு இல்லையே என்னும் கவலை. போதாசார்யர் கவலையற்று இருந்தார். ஆனால் பெரியவர்கள் விடவில்லை. தங்களது திருப்திக்காக டம்பக வம்சத்தின் இன்னொரு பெண்ணை போதாசார்யருக்கு இரண்டாவதாக திருமணம் செய்தனர். ஆனால்

போதாசார்யர் தமது சாதனையின் மார்க்கத்திலேயே கவனம் செலுத்தினார். எப்போதும் ஸ்ரீஹரியின் நினைவிலேயே இருந்தார். ஞானபக்தி தினந்தோறும் வளர்ந்து கொண்டே போயின. வைராக்கியம் பிறக்கத் துவங்கியது. ஞானபக்தி கர்மங்கள் இந்த மூன்றும் பக்குவமடைந்து அவரது ஆளுமையின் பகுதிகளாயிற்று.

ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர் துவக்கத்திலிருந்தே பெருந்தன்மை வாய்ந்தவர். ஏழைகளை பாதுகாப்பது, பண்டிதர்களின் வாழ்க் கையை மேம்படுத்துவது, மாணவர்களின் படிப்பிற்காக என்று இவற்றில் எப்போதும் ஈடுபாடு காட்டினார். குருகளின் ஆராதனை சமயத்தில் ஒவ்வொரு முறையும் தங்கம், வெள்ளி பாத்திரங்களை நூற்றுக்கும் மேற்பட்டவர்களுக்கு கொடுத்து வந்தார். புனேயில் அவர் இரண்டு ஆண்டு காலம் தங்கியிருந்தபோது, அங்கு பக்தர் களின் ஏழ்மை நிலையைக் கண்டு, மடத்தில் நித்ய அன்னதானம் நடத்தினார். இதனால் ஸ்ரீமடத்திற்கு கடன் அதிகரித்தது. மடத்தின் தங்கக் குடம், சில மண்டபங்கள் ஆகிய பொருட்களை சில முறை அடகு வைத்து, அதிலிருந்து பணம் பெற்று, சமூகத்திற்கு அன்னதானம் செய்தார். பின்னர் அப்பொருட்களை அடகிலிருந்து மீட்பதற்கு, ஸ்ரீசத்யபராக்ரமர், தினந்தோறும் அனுவியாக்யான பாராயண மற்றும் அபிஷேக நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டார். அதற்காக, கொர்லஹள்ளி போதராசார்யருக்கும் அழைப்பு விடுத்து, மதலகட்டிற்குப் போய் பிராணதேவரை உபாசனை செய்யுமாறு கேட்டுக்கொண்டார். போதராசார்யரும் மிகுந்த பக்தியுடன் முக்ய பிராணரை வணங்கி வந்தார். இதனால், மடத்தின் நிலைமையும் சற்று சீரடைந்தது.

பிறகு, நேரம் கிடைத்தபோதெல்லாம், போதராசார்யர் மதலகட்டிற்கு வந்து முக்யபிராணரை உபாசனை செய்யத் துவங்கினார். எல்லா சாஸ்திரங்களும் அறிந்திருந்தாலும், ஆசார்யருக்கு இன்னும் ஏதோ ஒரு தேடுதல் இருந்தது. அனைத்து சர்வமூலங்களையும் இன்னொரு முறை பண்டித சக்ரவர்த்திகளான ஸ்ரீஸ்ரீ சத்யபராக்ரமரிடம் படிக்கவேண்டும் என்று ஆசைப்பட்டார். ஸ்ரீவியாசராஜர் போன்ற மகாபண்டிதரிடம் ஸ்ரீ விஜயீந்த்ர ஸ்வாமிகளைப் போன்ற மகா ஞானிகள் 'நவக்ருத்வா நியாய சுதாம்' என்று ஒன்பது முறை நியாயசுதா பாடத்தையும், ஆறு முறை மொத்த சர்வமூல கிரந்தங்களையும் படித்தாராம். அப்போது

ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு விதமான பாடம், சிந்தனை தோன்றுமாம். அதுபோலவே, போதராசார்யருக்கும் உத்தராதி மடாதீசரிடம் ரிக்பாஷ்யம் படிக்கவேண்டுமென்று தீராத ஆவல் உண்டாயிற்று. குருவான ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தரிடம் தனது ஆசையை தெரிவித்தார். கிரந்தங்களை மறுபடி படிக்கும் ஆவலை வெளியிட்டார்.

ஸ்ரீகளவருக்கும் மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. புத்தி கூர்மையுள்ள இந்த போதராசார்யருக்கு, பாடம் சொல்வது அவருக்கு மிகவும் விருப்பமான வேலையாக இருந்தது. அவசியம் வந்து பாடம் படிக்கவும் என்று கூறினார். அனைத்து கிரந்தங் களையும் பாடம் சொல்லித்தருவதாக வாக்களித்தார். முதலில் 'ரிக் பாஷ்ய' பாடம் துவங்கியது. சத்யபராக்ரமரின் நடை, இதய பூர்வகமாக சொல்லிக் கொடுக்கும் வழிமுறை, எதையும் விளக்கமாக விவரிக்கும் பாணி, நியாய வியாகரண ஆகியவற்றின் பின்புலத்தில் சொல்லும் வழி, அனைத்துமே சிறப்பு. சிறந்த பாஷ்யத்தின் பின்னணியில் ஒவ்வொரு வேத மந்திரத்திற்கும் பற்பல விதமான அர்த்தங்களை சொல்லும் அவரது புலமை மிகவும் அற்புதமாக இருந்தது. சுரலோகத்திலிருந்து பாய்ந்து வரும் கங்கையை சிவன் தனது ஜடாமுடியில் பிடித்ததைப் போல, ஸ்ரீசத்ய பராக்ரமரின் இந்த வேத வாக்குகள் என்னும் கங்கையை போதரா சார்யர் தமது அறிவு என்னும் கமண்டலத்தில் பிடித்து நிரப்பினார்.

வேத வேதாந்தங்களின், நியாய வியாகரணத்தின் சூக்ஷ்ம அர்த்தங்களை, ரகசிய சுவாரசியங்களை, ஸ்ரீகளவரிடமிருந்து ஆசார்யர் அறிந்துகொண்டார். ஸ்ரீகளவரின் அத்யந்த அன்பிற்கு பாத்திரரானார். சமூகத்தில் சிறந்த பண்டிதர் என்று பெயர் பெற்றார். அனைவரின் மரியாதைக்கு அருகதை பெற்றார். ஸ்ரீசத்யபராக்ரமர் தினந்தோறும் அனுவியாக்யானத்தை முழுமையாக பாராயணம் செய்து, ஹரிவாயுகளுக்கு அபிஷேகம் செய்துவந்தார். போதரா சார்யரும் குருகளைப் போலவே அனுவியாக்யானத்தை முழுமையாக பாராயணம் செய்து, ஹரிவாயுகளுக்கு அபிஷேகம் செய்யத் துவங்கினார். தேவதைகளின் அருளை சம்பாதித்தார்.

ஒரு நாள் இரவு, ஸ்ரீசத்யபராக்ரமர் ரிக்பாஷ்ய பாடத்தை சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு முக்கிய சுவாரசியமான கட்டத்தை

*பாடத்தில் நெருங்கினர். மக்களும் ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தனர். போதராசார்யரும் கையில் புத்தகம் பிடித்து, பாடத்தை கவனத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார். திடீரென்று ஒரு பெரிய பாம்பு ஒன்று, எங்கிருந்தோ வந்து போதராசார்யரின் தலை மேல் விழுந்தது. சிறிது நேரம் அமர்ந்து, பின் அது நகர்ந்து சென்று விட்டது. தாம் நினைத்த விஷயத்திற்கு, டீகாராயரும் அனுமதி அளித்துவிட்டார் என்று ஸ்ரீகளவர் நினைத்தார். ஸ்ரீகளவர், தமது ப்ரிய சிஷ்யரான கொர்லஹள்ளி போதராசார்யருக்கு ஆசிரமம் அளித்து, அவரை தனது உத்தராதிகாரியாக செய்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார். இது அவருக்கு கனவில் தோன்றிய எண்ணமாகும். தற்போது டீகாராயரின் அனுமதியும் கிடைத்துவிட்டது என்று நினைத்தார். மடத்தில் தம்மிடம் பாடம் படித்த மற்ற பண்டிதர்களையும், லௌகிகர்களையும் அழைத்து இதைப் பற்றி விசாரித்தார். ஸ்ரீபாத புத்ரரான, மகாவித்வான் பீமபாளாசார்யர், ஸ்வாமி ராயாசாரியர், கலகலி மத்வாசார்யர், கௌடகிரி ஆசார்யர் ஆகியோருடன் ஆலோசித்து, ஸ்ரீபோதரா சார்யரை உத்தராதிகாரியாகி நியமிக்கும் அவர்களின் சம்மதங் களையும் பெற்றார். தமது அபிப்பிராயத்தை மனதிலேயே வைத்துக் கொண்டார்.*

*ஸ்ரீசத்யபராக்ரமர், ஆந்திராவின் கோதாவரி தீரத்திற்கு வந்தபோது, அங்கு வந்த சுமார் 300க்கும் மேற்பட்ட, அத்வைத ஸ்மார்த்த குடும்பத்தவர்களுக்கு, அவர்களின் வேண்டுதலின் படியே, முத்ரா தாரணை செய்து, வைஷ்ணவ தீக்ஷை அளித்தார். அங்கிருந்து சொன்னெ'க்கு வந்து, கிருஷ்ணமூர்த்தி மற்றும் பீமராயர் ஆகியோரின் தலைமையில் பிராணதேவரின் பிரதிஷ்டை செய்தார். பின்னர் துளஜாபுரத்திற்குப் போகும் வழியில் இந்தூர்க்கு சென்றார். அப்போது அங்கு காலரா நோய் பரவியிருந்தது. ஸ்ரீகளவருடன் வந்திருந்தவர்கள் பயந்தனர். திரும்ப கர்னாட காவிற்கே போய்விடலாம் என்று அவரிடம் முறையிட்டனர். கொல்லாபுரத்திலிருந்து பிஜாபுரத்திற்கு சென்றனர். அங்கு, பலகுந்தியின் ஜஹகீரின் வேண்டுகோளின்படி, பலகுந்தியில் நவராத்திரி உற்சவத்திற்காக தங்கினார். ஸ்ரீவேதவியாசரின் ஆணையை அறிந்து, இறைவனடி சேர்வதற்கான தனது நாளை தெரிவித்தார். உடன் சிஷ்யரை நியமிக்கவும் தயாரானார்.*

*சாலிவாகன சக 1801 (கிபி 1879) பிரமாதி சம்வத்ஸரம் ஆஸ்வின சுக்ல அஷ்டமியன்று கொர்லஹள்ளி போதராசார்யருக்கு பலகுந்தியில் சன்யாசம் வழங்கி ஸ்ரீசத்யவீர தீர்த்தர் என்று பெயர் சூட்டி, பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்தார். அந்த பரமாத்மனின் பரம பீடத்தில் அமர்த்தி, பட்டாபிஷேகம் செய்வித்தார். அப்போது 40 ஆண்டுகள் நிரம்பிய பக்குவப்பட்ட ஞானிகளாக இருந்தார். அன்றைய தினமே மதியத்திற்கு மேல் ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தர், பரந்தாமத்திற்கு பயணம் மேற்கொண்டார். குருகளின் பிருந்தாவனத்தை, கிருஷ்ணா நதிக்கரையில், ஜஹகீரின் கிராமமான சித்தாபுரத்திலேயே கட்டினார். ஸ்ரீசத்யபராக்ரமரின் ஆராதனையை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார். பண்டிதர்களுக் கெல்லாம் வெள்ளிப் பாத்திரங்கள், சால்வைகள், மடி, கை நிறைய தக்ஷிணை கொடுத்து, ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்களுக்கு அன்ன தானம் செய்தார். சில நாட்கள் அங்கேயே இருந்து, குருகளின் ஆராதனையை செய்து, பின் ஸ்ரீசத்யவீரர் தார்வாட் பகுதிக்கு பயணம் மேற்கொண்டார்.*

*மடத்து நிர்வாகத்தில் சில பேரின் குறுக்கீடுகளால் சில பிரச்னைகள் தோன்றின. முந்தைய ஸ்ரீபாதபுத்ரரான பீமாபாளா சார்யருக்கும், கணக்காளராக இருந்த வாசுதேவாசார்யருக்கும் அதிகார விஷயத்தில் விவாதம் இருந்து வந்தது. கணக்காளர் மடத்து அதிகாரத்தை கைப்பிடிக்கும் முயற்சியில் இருந்தார். ஸ்ரீகளவரை அர்ச்சகர் என்று சொல்லும் அளவிற்கு அவரின் அதிகாரம் இருந்தது. அதற்கேற்ப, பற்பல ஆதாரங்களை உருவாக்கி மடத்தின் சர்வாதி காரத்தையும் தனது கைப்பிடிக்குள் வைத்திருந்தார். அவர்கள் அனைவரையும் ஏதாவது ஒரு வழியில் வெளியில் தள்ள வேண்டி யதாக இருந்தது. அதற்காக, ஸ்ரீசத்யவீரர் தார்வாடிற்கு வந்தவுடன், ஜட்ஜ் திருமலாசார்யர், பௌகாவி ஹுச்சராவ் வக்கீல் ஆகியோரை அழைத்தார். சட்டம், வழக்கு ஆகிய விஷயங்களை ஆலோசித்தார். கணக்காளரின் ஆட்டங்களை விவரித்தார். அவர்களின் கருத்துக்களை கேட்டறிந்தார். இது ஒரு மிகப்பெரிய வேலையாகவே இருந்தது. அதற்கு செய்யவேண்டிய வேலைகள், அதனால் ஏற்படப்போகும் பிரச்னைகள் அனைத்தையும் அறிந்து, ஸ்ரீகளவர் அனைத்திற்கும் தகுந்த ஏற்பாடுகளை செய்திருந்தார். ஸ்ரீகளவரின் சரியான திட்டமிடலைக் கண்டு அனைவரும் வியப்படைந்தனர்.*

*ஸ்ரீமடம் தார்வாடிற்கு வந்ததில் அனைத்து சிஷ்யர்களும் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர். ஸ்ரீமடம் அங்கே 3 மாதங்கள் வரை இருப்பதற்கு ஜட்ஜ் திருமலராயரே முன்னின்று அனைத்து ஏற்பாடுகளையும் செய்தார். ஸ்ரீகளவரின் பாண்டித்யம், பாட பிரவசனங்களினால் அவரது அசாதாரண தபஸ்-சக்தி, மற்றும் பிராணதேவரின் உபாசனையினால் அவரிடம் மக்களுக்கு மிகவும் மரியாதை, பக்தி உண்டாயிற்று. தினந்தோறும் விட்டல ஆலயத்தில் ஸ்ரீபகவத்கீதா உபன்யாசத்தை செய்து வந்தார். ஆயிரக்கணக்கான மக்கள் இந்த அற்புத உபன்யாசத்தைக் கேட்க திரண்டிருந்தனர். ஸ்ரீகளவர் மதிஹாள நரசிம்ஹ ஆலயத்தில் தங்கியிருந்தார்.*

## பிராமணரின் பாததூளியின் மகிமை

*ஸ்ரீகளவர் தார்வாடில் சாதுர்மாசத்தில் இருந்தபோது, ஒரு நாள், சுக்ரவார பேட்டையின் வெங்கடேச ஆலயத்தில் தன் பிரவசன மங்களத்தை செய்துகொண்டிருந்தார். மங்கள நேரத்தில், பற்பல சிறந்த பண்டிதர்களை அழைத்து மரியாதை செலுத்த நினைத்தார். அந்த இடத்தில் ஆசார்யரான குடி பலராமாசார்யரிடம் இதை தெரிவித்தார். 'மந்திராக்ஷதை பெறுவதற்கு அறிஞர்கள் வருவார்கள். இந்த இடத்தில் வெள்ளை துணியை விரி' என்றார். அப்படியே செய்தனர். அனைவருக்கும் வெள்ளி பாத்திரம், வஸ்திரம், தக்ஷிணை, மந்திராக்ஷதைகளை கொடுத்தார். பலராமாசார்யருக்கு எதுவும் கொடுக்கவில்லை. இந்த நிகழ்ச்சி முழுவதுமாக முடிந்த பிறகு, அங்கு விரித்திருந்த துணியின் மேல் விழுந்திருந்த பிராமணர்களின் பாத-தூளிகளை, ஒரு வெள்ளி கிண்ணத்தில் நிரப்ப வைத்தார். அதன் மேல் ஒரு ரூபாய் தக்ஷிணையை வைத்து, பலராமாசார்யருக்குக் கொடுத்தார். 'உங்கள் குடும்பத்திற்கு நலம் உண்டாகும், எந்தவொரு ஆபத்து விபத்து, நோய் நொடி வந்தாலும், இந்த பாததூளியை இட்டுக்கொண்டால் அனைத்தும் ஒரே நொடியில் தீர்ந்துவிடும்' என்றார். ஸ்ரீசத்யவீரரின் ஞான திருஷ்டி இப்படி இருந்தது.*

## தார்வாடில் வாக்யார்த்தம்

*ஸ்ரீசத்யவீரர் தார்வாடில் இருந்தபோது ஒரு சம்பவம் நடந்தது. அங்கே இருந்த உயர்நிலைப் பள்ளியில் சமஸ்கிருத ஆசிரியராக*

*இருந்தவர் பண்டிதர் அண்ணா சாஸ்திரி அர்லேகர் அவர்கள். அவர் சைவ தீக்ஷை பெற்றிருந்த அத்வைதிகள். அவர் 'தப்த முத்ரா தாரணம்' பற்றி வேதங்களில் சொல்லப்படவில்லை, வேதத்திற்கு எதிரானது, தப்த முத்திரை, ஸ்ம்ருதி, சம்பிரதாயத்திலும் ஆகிய எதிலும் இல்லை என்று வாதம் செய்தார். இந்த விஷயம் தெரிந்தவுடன், ஸ்ரீகளவர், அண்ணா சாஸ்திரியவரை ஒரு விவாதத்திற்கு வருமாறு அழைப்பு விடுத்தார்.*

*மதிஹாள நரசிம்ம ஆலயத்திலேயே சபை நடக்கும் என்றும் தீர்மானித்தார். விவாதத்தைக் காண பற்பல மக்களும் உற்சாகத்துடன் சேர்ந்துவிட்டனர். நிரம்பிய சபையில் முதலில் ஸ்ரீசத்யவீரர் பேசினார். ருக்வேதம் முதலான நான்கு வேத சம்ஹிதை, பிராம்ஹண, ஆரண்யக, உபநிஷத்களில் சொல்லப்பட்ட 'அதப்ததனூர்னததாமோ அஷ்னுதே' முதலான பற்பல வாக்கியங்களை மேற்கோள் காட்டி, அதன் பொருளை விவரித்து, தப்தமுத்ரா தாரணை என்பது வேதங்களில் சொல்லப்பட்டதே ஆகும் என்று விளக்கினார். பிறகு 18 மகாபுராணங்களில் சொல்லப்பட்ட முத்ரையின் மகிமை, விருஷபாசலம் முதலான கதைகளில் சொல்லப்பட்ட சம்பவங்கள் என அனைத்தையும் விளக்கினார். மகாபாரதம் மற்றும் சுமார் 40 ஸ்ம்ருதிகளில் இருக்கும் நூற்றுக்கும் மேற்பட்ட ஆதாரங்களை உதாரணம் கொடுத்தார். சங்கர திக்விஜய மற்றும் அவரின் உரைகளிலிருந்தும் தப்தமுத்ரா தாரணை வேதங்களில் சொல்லப்பட்டதே, த்ரிபுண்ட்ர என்பதே வேதங்களுக்கு எதிரானவை என்று ஆணித்தரமாக நிரூபித்தார்.*

*இவ்வளவு ஆதாரங்களுடன் நிரூபிக்கப்பட்ட தப்தமுத்ரா தாரணைக்கு எதிராக, பண்டிதர் அண்ணா சாஸ்திரி அவர்களால் எதையும் பேசமுடியவில்லை. அதற்கான வழியும் புலப்படவில்லை. இந்த விஷயத்திற்காக, ஸ்ரீகளவர் இவ்வளவு கிரந்தங்களைப் பார்த்து, இவ்வளவு ஆதாரங்களை எடுத்திருப்பார் என்று அவர் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. இப்படி உலகத்து மக்கள் அனைவரின் கேள்விகளுக்கும், எதிர் வாதத்திற்கும், சந்தேகங்களுக்கும் பதில் அளிக்கக்கூடியதாக இருக்கும் ஒரே பரம்பரை உத்தராதி மடம் என்னும் விஷயம் அண்ணா சாஸ்திரி அவர்களுக்கு எப்படி தோன்றியிருக்கும்? எதையும் பதில் அளிக்கத் தோன்றாமல்*

அண்ணா சாஸ்திரி அவர்கள் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு எழுதிக்கொடுத்தார்.

தப்த முத்ராதாரணை பற்றி அப்போது சேகரித்த அனைத்து ஆதாரங்களையும் தொகுத்து, ஸ்ரீசத்யவீரர் 'தப்தசக்ர பூஷண' என்னும் கிரந்தத்தை இயற்றி வெளியிட்டார். தார்வாடில் அந்த ஆண்டின் சாதுர்மாச விரதத்தைப் பூர்த்தி செய்து, ஸ்ரீகுருகளின் மகா சமாராதனைக்காக ஹைதராபாத் வந்து சேர்ந்தார்.

ஹைதராபாத்தில் குருகளின் மகாசமாராதனையை மிகவும் சிறப்புடன் கொண்டாட திட்டமிட்டார். ஆனால் மடத்து நிர்வாகத்தில் சில பிரச்னைகள் வந்தன. முந்தைய நிர்வாகத் தினருக்கும் தற்போதைய நிர்வாகத்தினருக்கும் கருத்து வேறு பாடுகள் வந்தன. அப்போது ஸ்ரீகளவர், வக்கீல் ஹுச்சுராவ் மற்றும் ஜட்ஜ் திருமலராயருக்கு இந்த பிரச்னைகளை விளக்கினார். தாம் பயணத்தில் இருந்தாலும், அவ்வப்போது இந்த பிரச்னைகளைப் பற்றி தமக்கு கடிதம் மூலம் தெரிவிக்கவேண்டும் என்று தெரிவித்தார். வெவ்வேறு ஆட்களுக்கு, நிர்வாகத்தை பிரித்துக் கொடுத்து, தாம் சாம்ராஜ்யத்தின் வேலைகளை மட்டும், அதாவது பாட பிரவசனம், வாதிகளுடன் வாதித்தல் ஆகியவற்றில் கவனம் செலுத்தலானார்.

ஹைதராபாத்தில் மகாசமாராதனை நடைபெறுகிறது என்று அறிந்த மக்கள், அனைத்து திசைகளிலிருந்தும் திரண்டு வந்து கலந்துகொண்டனர். பாகலிங்கபல்லியின் உத்தராதிமடம் அன்று மிகவும் விஸ்தாரமாக இருந்தது. ஆந்திராவில் விசாகப்பட் டினத்திலிருந்து துவங்கி, ராஜமகேந்திரி, விஜயவாடா, குண்டூர், கர்னூல், கடப்பா, திருப்பதி வரை இருக்கும் அனைத்து வைஷ்ண வர்களுக்கும் ஒரே குரு மடம், ஸ்ரீமத் உத்தராதி மகாபீடம். ஸ்ரீமடத்து மேல் அபிமானமும் அதிகம். 15 ஆயிரத்துக்கும் மேல் மக்கள் சமாராதனைக்கு வந்துவிட்டனர். மூன்று நாட்களும் சபை, வாக்யார்த்த, வித்யார்த்திகளின் அனுவாத, பாடபிரவசனம், பண்டிதர்களின் உபன்யாசம் என்று நிகழ்ச்சிகள் இடைவிடாமல் நடந்தன. ஸ்ரீமூலராமனின் பூஜை, அனைவருக்கும் தீர்த்த பிரசாதம், முத்ராதாரணம் தொடர்ந்து நடந்தன. வந்த பண்டிதர் அனை வருக்கும் சால்வை, மடி, வெள்ளி பாத்திரம், கை நிறைய

சம்பாவனைகளை, ஐந்து நாட்களுக்கு ஸ்ரீசத்யவீர தீர்த்தர் வழங்கினார். மூன்று மடத்து பண்டிதர்களையும் அவரவர் தகுதிக்கேற்ப மரியாதை செலுத்தினார். ஸ்ரீகளவரின் கருணை மிகவும் பெரியது. சில நூற்றாண்டுகளுக்கு முன் நடந்த இந்த மகா சமாராதனைக்கு, ஸ்ரீமடத்திற்கு அன்றைய பணம் ரூபாய் 50 ஆயிரம் செலவாயிற்று என்று அன்றைய கணக்கு வழக்கு களிலிருந்து தெரிய வருகிறது. ஸ்ரீசத்யவீரர், தமது குருவான ஸ்ரீசத்யபராக்ரமருக்கு சரியான தகுதியான சிஷ்யர் என்று அன்றைய சமூகம் மனதார பாராட்டியது. அவரது ஆளுமைக்கு தனது பக்தியை ஈடாகக் கொடுத்தது. ஸ்ரீசத்யவீரரின் புகழ் திக்கெட்டும் பரவத் துவங்கியது.

### பிராமணர்களுக்கு இச்சா (விரும்பிய) போஜனம்

ஸ்ரீமூலராம திக்விஜய ராமரை, ஸ்ரீவேதவியாசரை தினமும் பூஜிக்கும் ஸ்ரீசத்யவீரர், அந்த ஐந்து விக்ரகங்களில் எப்போதும் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் சல-பிரதிமையான ஐந்து சுத்த பிராமணருக்கு தினமும் இச்சா போஜனத்திற்கு (அவர்கள் விரும்பிய பதார்த்தங்களை சமைத்து பரிமாறுவது) ஏற்பாடு செய்தார். அந்த சமயத்தில், தாம், தத்வபிரகாசிகாவின் ஒவ்வொரு அதிகரணத்தையும் அனுவாத செய்துவந்தார். இத்தகைய விரதத்தை, மூன்று ஆண்டுகள் வரை இடைவிடாமல் செய்து வந்தார்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, மீண்டும் இரண்டாவது முறையாக ஹைதராபாத்திற்கு விஜயம் செய்தார். வழக்கப்படி, இச்சா போஜத்திற்கு, ஐந்து பிராமணர்களை சாப்பிட அழைத் திருந்தார். ஒவ்வொரு நாளும் வெவ்வேறு பிராமணர்களை சாப்பிட அழைத்திருந்தார். ஒரு நாள் அப்படி அழைக்கப்பட்ட ஒரு பிராமணர், சாப்பிட வருவதற்கு தயங்கினார். அவரவர்களின் விருப்பப்படி என்ன வேண்டும் என்று கேட்டு, அதன்படியே சமைத்து பரிமாறுவது வழக்கம். அப்போது புஷ்ய மாதம். அப்போது தனக்கு மாம்பழ சீகர்ண (சாறு) வேண்டும் என்று ஒரு பிராமணர் கேட்டார்.

அப்போது புஷ்ய மாதம் ஆகையால், மாம்பழ காலம் வருவதற்கு இன்னும் மூன்று மாதங்கள் இருந்தன. இந்த கடினமான நிலைக்கு ஏன் எங்களை தள்ளுகிறாய் என்று அந்த

சிஷ்யர்கள், அந்த பிராமணன் மேல் கோபப்பட்டனர். ஆனால் ஸ்ரீகளவர் மிகவும் அமைதியாக இருந்தார். தம் விரதத்தையும், பிராமணனின் விருப்பத்தையும், ஸ்ரீஹரியே நிறைவேற்றுவான் என்பது அவரது திடமான நம்பிக்கை. சிஷ்யர்களையும் கோபப் படாமல், அமைதி காக்கும்படி கூறினார். 'பிராமணர் ஸ்ரீஹரியின் சலபிரதிமை (பிரதி). பாகவத தாத்பர்யத்தில் ஸ்ரீமதாசார்யர், இத்தகைய சல-பிரதிமைகளின் பூஜையை விசேஷமாக செய்ய வேண்டும் என்று கூறியிருக்கிறார். ஆகையால் பிராமணர்கள் மேல் கோபம் கொள்ளக்கூடாது. அனைத்தும் ஹரியின் விருப்பம் என்று விடவேண்டும்' என்றார்.

பாடம் துவங்கிற்று. அது முடியும் நேரத்தில், ஸ்ரீமடத்து சிஷ்யர் ஒருவர் வந்தார். அவர் ஹைதராபாத் நிஜாமிடம் வேலை பார்த்து வந்த உயர் அதிகாரி. பாடம் முடிந்தபிறகு, ஸ்ரீகளவரை சந்திக்க வேண்டி வெளியில் அமர்ந்திருந்தார். அப்போது சிஷ்யர்கள் அன்றைய பிரச்னையை அந்த அதிகாரிக்கு தெரிவித்தனர். அவரோ, இது என்ன பிரச்னை, மாம்பழத்தை நான் தருவிக்கிறேன் என்று அங்கிருந்து புறப்பட்டார். நவாப்பிடம் சென்று, தம் குருவான ஸ்ரீகள் வந்திருப்பதையும், அவரின் விரத நியமங்களைப் பற்றியும், அதற்கு இன்று மாம்பழம் தேவை என்றும் கூறினார். நவாப்பும் மிகவும் மகிழ்வுடன், தமது தோட்டத்தில் ஏகப்பட்ட மாம்பழங் களை தேனில் ஊறப் போட்டிருக்கிறோம். உமக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவை எடுத்துச் செல்லுங்கள் என்றார்.

அது போலவே, தோட்டத்திற்கு சென்று பார்த்தால், தேனில் ஏகப்பட்ட மாம்பழங்களை ஊறப் போட்டிருந்தனர். அவற் றிலிருந்து சிலவற்றை எடுத்துக்கொண்டு அந்த சிஷ்யன் மடத்திற்கு வந்தார். ஸ்னானத்திற்குப் புறப்பட்டிருந்த ஸ்ரீகளவரின் முன் மாம்பழங்களை வைத்து வணங்கினார். பழங்களைப் பார்த்து ஸ்ரீகளவருக்கு மிகவும் வியப்பு. 'கிமலப்யம் பகவதி ப்ரசன்னே ஸ்ரீனிகேதனே', 'ஸ்ரீஹரி நினைத்தால் நமக்கு என்ன குறை?' என்னும் வாக்கு அன்று சாத்தியமாற்று. இது அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பமே என்று சிஷ்யர்களுக்கு அருளினார்.

அந்த பிராமணனுக்கு, புஷ்ய மாதமானாலும், மாம்பழ சீகர்ணவை பரிமாறினார். ஸ்ரீசத்யவீரரின் சல-பிரதிமை பூஜை,

தத்வஞானம் இப்படி இருந்தது. ஸ்ரீசத்யவீரரின் வாழ்க்கை தர்மமயமாக இருந்தது. அவரது நற்சிந்தனை மிகவும் உயர் வானதாக இருந்தது.

சில கணக்காயர்கள், நீதிமன்றங்கள் மூலமாக மறுபடி ஸ்ரீமடத்திற்கு தொந்தரவு கொடுக்கத் துவங்கினர். மறுபடி ஏதாவது செய்து, மடத்து அதிகாரத்தை கைப்பற்ற வேண்டும் என்பது அவர்களது நோக்கம். ஸ்ரீசத்யவீரர் உண்மையிலேயே வீரர். முக்ய பிராணரின் உபாசனையை நிரந்தரமாக தொடர்ந்து செய்யலானார். மடத்தை இப்பிரச்னைகளிலிருந்து விடுவிக்க தீர்மானித்தார். மதலகட்டில் சில நாட்கள் தங்கியிருந்து, பிராணதேவரை ஆராதித்தார். மைசூரில் நீதிமன்றத்தில் வழக்கு நடந்து, ஸ்ரீகளவருக்கு வெற்றி கிட்டியது. மடத்தின் மேல் தமக்கு அதிகாரம் உள்ளது என்று இந்த கணக்காயர்கள் தொடர்ந்த வழக்கில் அவர்களுக்கு தோல்வியே கிட்டியது. ஸ்ரீகளவருக்கு தொந்தரவு கொடுக்க வேண்டி, அனைத்து விதங்களிலும் முயற்சித்த அவர்களுக்கு துரதிருஷ்டமே வந்தது. இப்படி தவறான விதத்தில், ஸ்ரீமடத்து செல்வத்தையும், அதிகாரத் தையும் அபகரிக்க முயன்ற கணக்காயர்கள், அதற்கான சரியான தண்டனையை பெற்றனர். 'நாசதோ வித்யதே பாவ:'. கெட்ட செயல் புரிந்தவர்களுக்கு என்றும் சுகம் கிடைக்காது. இது எக்காலத்திற்கும் பொருந்தும்.

செல்வம், அதிகாரம் இவற்றிலிருந்து மற்றவர்களின் பங்கு விலகியதால், ஸ்ரீசத்யவீரரின் கைகளுக்கு மேலும் பலம் கூடியது. ஏழ்மையில் வாடிய ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்கு உதவினார். திருமணம், உபநயனம், யாத்திரை என்று தானம் கேட்டு வந்தவர்களை அவர் என்றும் வெறும் கையில் திருப்பி அனுப்பவில்லை. கை நிறைய பணம் கொடுப்பதே அவரது வாடிக் கையாயிற்று. கர்ணன் இருந்திருந்தால், மகிழ்ச்சியடைந்திருப்பான் என்று சொல்லும்படி ஆயிற்று. நிர்வாகப் பிரச்னைகள் தீர்ந்ததால், மடத்து சிறப்புகளும் கூடின. வெளிப்படையான நிர்வாகம் அனைவரையும் ஈர்த்தது.

ஏழு யானை, 20 குதிரைகள் என்று ஸ்ரீமடத்திற்கு பயணத்திற்கு உதவியாக இருக்க, நூற்றுக்கும் மேற்பட்ட பண்டிதர்கள், மாணவர்கள், வேலையாட்கள் என மடம் ஒரு பெரிய

*சாம்ராஜ்யத்தைப் போலவே இருந்து வந்தது. வெள்ளி மண்ட பத்தில் ஸ்ரீமூலராமனின் பூஜை, ஸ்ரீமன் நியாயசுதா முதலான பாட பிரவசனம் என்று மடம் பூ-வைகுண்டமாகவே திகழ்ந்தது.*

**மதராஸ் பயணம்**

*ஸ்ரீசத்யவீரர், ஹைதராபாத்திற்குப் பிறகு, மதராஸ் பிராந்தியத் திற்கு பயணம் மேற்கொண்டார். சாலிவாஹன சக 1809 (கிபி 1884) தாரண சம்வத்ஸரம், ஸ்ரீகளவர் மதராஸ்க்கு வந்து சேர்ந்தார். அன்றைய ஆங்கிலேய நிர்வாகம் அனைத்து இடங்களிலும் பரவி, இந்தியர்கள் மானசிகமாக அவர்களின் ஆட்சியை ஏற்று அவர் களுக்கு அடிமையாக இருந்த காலம். மேற்கத்திய கலாசாரத்திற்கு இங்கிருந்த புத்திசாலியான பிராமணர்களும் பலியான காலம் அது.*

*மதராஸில் ஒரு பணக்கார பிராமணர். அவரின் மகள் திருமணமான சில நாட்களிலேயே கணவனை இழந்து விதவை யானாள். அந்த மகளுக்கு மறுபடி திருமணம் செய்யவேண்டு மென்று அந்த செல்வந்தர் விரும்பினார். அப்படி செய்யவில்லை எனில், மகளுக்கு தான் மானசிக துரோகம் செய்துவிட்டதாக நினைத்தார். ஆகையால், விதிப்படியே, சாஸ்திரங்களில் மறுமணத் திற்கு அனுமதி உண்டு என்று சொல்வதற்காக பிராமணர்களின் சபையைக் கூட்டினார். அதன்படி மறுமணத்திற்கு அனுமதி அளிக்க பல பிராமணர்கள் அந்த சபையில் தயாரானார்கள். அவர் ஸ்ரீமடத்திற்கும் இதற்காக ஒரு கடிதம் எழுதினார்.*

*'நீங்கள் சாஸ்திர விதிப்படி உங்கள் கருத்தை தெரிவிக்க வேண்டும்' என்றார். ஸ்ரீகளவர் அப்போதே மதராஸ்க்கு வந்திருந்தார். அவருடன் கிரூர் ஸ்வாமியாசார்யர், சிக்கிரூர் ஸ்வாமியாசார்யர், வாயி வாசுதேவாச்சார், கர்ஹாட் கோபாலாசார், உமர்ஜி பாளாசார், கும்பகோண கிருஷ்ணாசார்ய, அகரகேட ஜயராமாச்சார், சதாவதானி திருவாதி லக்ஷ்மணாசார்ய, காஞ்சி சிங்கராசார், தஞ்சாவூர் சாம்ப சாஸ்திரிகள் ஆகிய பண்டிதர்களும் இருந்தனர். ஆனால் சபையில் எழுந்த கேள்விகளுக்கு முன்னின்று பதில் அளித்தவர் ஸ்ரீகளவர். அனைத்து சாஸ்திர கிரந்தங்களையும் எடுத்து ஆய்ந்து, அவற்றிற்குத் தக்கவாறு பதிலளித்து வந்தார்.*

அந்த சமயத்தில் சுமார் 6-7 மாத காலங்கள் ஸ்ரீகளவர் மதராஸ்லேயே தங்கியிருந்தார். இந்த வேலைக்காகவே ஸ்ரீகளவர் அனைவரையும் அந்த சபைக்கு வரவழைத்து, ஸ்ரீமடத்து சார்பில் 40,000 ரூபாய்களை செலவு செய்யவேண்டியதாயிற்று. ஸ்ரீரகுநாத ராயருக்காக கீடாம்பி ஸ்ரீனிவாசாசார் என்னும் ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர் விதவை மறுமணத்தை ஆதரித்துப் பேச வந்திருந்தார்.

தாரண சம்வத்சரம் பாத்ரபத சுத்த சதுர்தசியன்று சபை துவங்கியது. கர்ஹாட் கோபாலாசார் 'நீர்கோ' என்னும் வியாகரண சூத்திரத்தை விளக்கி மூன்று நாட்கள் வாக்யார்த்தம் செய்தார். அவரின் புலமைக்கு சபை கைதட்டி பாராட்டியது. அடுத்த 3-4 நாட்கள் விதவை மறுமணம் சாஸ்திரத்திற்கு எதிரானது என்று பலரும் பேசினர். இந்த அனைத்து நிகழ்ச்சிகளும் திருவல்லிக் கேணி பார்த்தசாரதி கோயிலில் நடைபெற்றது.

இந்த சம்ஸ்கிருத வாக்யார்த்த, உபன்யாசங்களின் சாரத்தை காஞ்சி சுப்பாராவ் அவர்கள், பேசுமொழியில் மொழிபெயர்த்து சபையினருக்கு கூறிவந்தனர். 7-8 நாட்கள் நடந்த வாக்யார்த் தங்களின் சாரத்தை, கன்னடத்தில் திருவாதி லட்சுமணாசார், ஸ்ரீகளவரின் ஆணைப்படி விவரித்தார். இறுதியில், வாத பிரதிவாத விவாதங்களுக்குப் பிறகு, ஸ்ரீசத்யவீரர், தகுந்த ஆதாரங்களுடன், விதவை மறுமணத்திற்கு எதிராக பேசத் துவங்கினார். இப்படி 11 நாட்கள் வரை இந்த சபை நடந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் திரண்டு வந்து இந்த சபையில் பங்கேற்றனர்.

இறுதியில் ரகுநாதாசார்யர், அவரது பண்டிதரான ஸ்ரீனிவா சாச்சார், எதற்கும் பதில் அளிக்கமுடியாமல் மன்னிப்பு கேட்டு, தங்களின் தோல்வியை ஒப்புக்கொண்டனர். தங்களை மன்னிக்க வேண்டுமென்று ஸ்ரீகளவரை சாஷ்டாங்கமாக விழுந்து வணங் கினர். சனாதன தர்மங்களின் விதியில், சாஸ்திர சம்பிரதாயங்களில் தமது நம்பிக்கை மேலும் திடமானது என்று கூறினர். ஸ்ரீகளவர் அந்த பண்டிதர்களுக்கு தக்க மரியாதை செய்து கௌரவித்தார். இந்த அனைத்து விஷயங்களையும், நிர்ணய புத்தகம் எழுதி வெளியிட்டார்.

அனைத்துவித எதிர்ப்புகளுக்கும் தக்கவாறு பதில் அளித்தார் ஸ்ரீசத்யவீரர். ராமதுர்கா ஆசார்யர் 'ந விவாஹ விதாஉக்தம் விதவா

*வேதனம் புன:' (மனுஸ்ம்ருதி 9-65) என்னும் வாக்கியத்தின் மேல் வாக்யர்த்தம் செய்தார். சுரட்டூர் ஆசார்யர் 'ந த்விதீயஸ்ச சாத்வினாம் பதிர்பர்த்தோ பதிஸ்யதே' என்று இன்னொரு வேத வாக்கியத்தை உதாரணம் கொடுத்து விதவை மறுமணத்தை கண்டித்தார்.*

*அனைத்து கிருஹஸ்தர்களின் சார்பாக வாதித்துக்கொண்டிருந்த ராமானுஜ மதத்தைச் சார்ந்த ஸ்ரீனிவாசாசார்யர் 'பாணிக்ராஹே ம்ருதே பாலா' என்னும் தர்மசூத்திரத்தை ஆதாரமாகக் கூறினார். போதாயன தர்மசூத்திரம் மற்றும் நாரத புராணத்தின் சில வாக்கியங்களையும் கூறினார். வாயே ஆசார்யர் 'கலௌ பாராஷர ஸ்ம்ருதி' என்று கூறி விதவை மறுமணத்தைக் கண்டிக்கும் பற்பல ஸ்ம்ருதி, சூத்ரங்களை உதாரணமாகக் கொடுத்தார். கல்கலி ஆசார்யர் 'பதி' என்னும் சொல்லை சுவாரசியமாக விளக்கினார்.*

*அப்போது திவான் பஹதூர் ரகுநாதராயர் மறுபடி 'வேத புராணங்களில் விதவை மறுமணத்தை அன்றைய காலத்தின் ரிஷிகள் மறுத்திருக்கலாம். ஆனால் இது வேதத்திற்கு உட்பட்ட தல்ல. வேதத்தில் இத்தகைய விதிகள் சொல்லப்படவில்லை. அன்றைய காலகட்டத்திற்கு சொல்லப்பட்டவை, இப்போதும் பொருந்தும் என்று சொல்வதற்கில்லை. வேதத்தில் சொல்லி யிருந்தால் நாம் ஒப்புக்கொள்கிறோம். மறுமணத்தை மறுக்கும் ஒரே ஒரு வாக்கியத்தைக் காட்டினாலும், நாம் உங்களின் வாதத்தை ஒப்புக்கொள்கிறோம்' என்றார்.*

*பண்டிதர்கள் திகிலடைந்தனர். ஒருவருக்கொருவர் முகம் பார்த்துக்கொண்டனர். அங்கு அமைதி நிலவியது. ஸ்ரீசத்யவீரர் புன்னகைத்தார். தமதேயான கம்பீரமான குரலில் பேசத் துவங் கினார். ஸ்ம்ருதி, புராண, இதிகாச, சூத்ர, பாரதாதி வசனங்கள், வேதத்தைப் போலவே ஆதாரபூர்வமானவை. ஆனாலும், ரகுநாதராயரின் கருத்திற்கேற்ப வேத வசனத்தையே மேற்கோள் காட்டுகிறோம். தைத்திரிய சம்ஹிதையில் 'யதெஷேஸ்மின் யொபே த்வே ரஷனே பரிவ்யயதி தஸ்மாதகோ த்வே ஜாயே' (6-6, 4-5-2) என்ற பல வசனங்களை உதாரணம் காட்டி, வேதம் விதவை மறுமணத்தை மறுக்கிறது என்றார்.*

*அப்போது ரகுநாதராயர் மற்றும் விதவை மறுமணத்தை ஆதரித்துப் பேசிய பண்டிதர் ராமானுஜ மடத்தைச் சேர்ந்த கீடாம்பி*

ஸ்ரீனிவாசாசார்யர், தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு, ஜயபத்திரத்தை எழுதி சபையில் கொடுத்தனர்.

இந்த சபையில் சாட்சியாக இருந்தவர்கள், வாக்யார்தத்தில் பங்கு பெற்ற மகாபண்டிதர்கள் - ஸ்வாமிராசார்ய சிக்கரூர், ஸ்வமிராசார்ய கிரூர், பாகல்கோடே, பீமசேனாசார்ய வாமனப்யாடி, வாசுதேவாசார்ய கர்ஹாடகர், க்வால்ஹேர வேதவியாசாசார்ய, வாமனப்யாடி, வாசுதேவாசார்ய உடுப்பி, ராகவேந்த்ராசார்ய முளபாகிலு, ராமாசார்ய ஆனேகல் பெங்களூரு, அனந்தாசார்ய கஜேந்திரகடகர சதாரா, அண்ணய்யாசார்ய ஹுலகி, ஷ்ருங்கலாசார்ய காஞ்சி, சி.எம். பத்பனாபாசார்ய அகரகண்ட ஜயராமாச்சார்ய, ராமதுர்கா ஸ்ரீனிவாசாசார்ய - என இவர்கள் அனைவரும் கையெழுத்து இட்டிருக்கின்றனர்.

சபையில் நடந்த அனைத்து வாத, பிரதிவாதங்களை தொகுத்து, ஸ்ரீசத்யவீரர் 'ஸ்த்ரீ புனர்விவாஹ கண்டனம்' என்று ஒரு புத்தகம் எழுதி, பல்வேறு மொழிகளில் அதை வெளியிட்டு அனைவரிடமும் சேர்ப்பித்தார். இத்தகைய தவறுகளைக் கண்டித்து, சாஸ்திரத்திற்கு எதிரான துர்-வாதங்களை புறக்கணித்து, சாஸ்திரத்துக்கு ஒப்பான உண்மைகளையே நிரூபித்தார். அனைத்திலும் வெற்றி பெறுபவர் என்பதாலேயே இவரது குருவானவர் இவருக்கு 'சத்யவீரர்' என்று பொருத்தமான பெயரை வைத்திருக்கிறார். 'சதே-அவீரா இதி சித்தாந்த: யஸ்மாத் ஸ: சத்யவீர:' என்னும் இலக்கணக் குறிப்பின்படி இதை பொருள் கொள்ளவேண்டும்.

மூன்று மடத்து பண்டிதர்கள் அனைவரும் சேர்ந்து, சனாதன வைதிக மதத்தின் பெருமையை கரைசேர்த்த மற்றும் இதற்கான கிரந்தத்தை இயற்றிய ஸ்ரீ சத்யவீர ஸ்ரீகவளவரின் வெற்றியின் நினைவாக, அவரை கௌரவித்தனர். யானை மேல் அம்பாரி வைத்து அதில் ஸ்ரீகளவரை அமரவைத்து நகர்வலம் செய்வித்தனர். ஸ்ரீ சரள மாதவராயர், ஸ்ரீகளவருக்கு தாமிர பட்டயத்தில், அவரது வெற்றியை எழுதித் தந்தார். இன்றும் அந்த பட்டயத்தை கொர்ல ஹள்ளி மடத்தில் பார்க்கலாம். மராத்தி மொழியில் இந்த கௌரவ பட்டயம் எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீசத்யவீரர் நடத்திய வரலாற்று சிறப்பு மிக்க செயல்களில் இதுவும் ஒன்றாகும். ஸ்ரீசத்யவீரர் இயற்றிய 'தப்தசக்ர பூஷண' 'ஸ்த்ரி புனர்விவாஹ கண்டன'

ஆகியவை இன்றும் நமக்கு வரக்கூடிய சந்தேகங்களுக்கு சரியான பதில்களைத் தருகின்றன.

இந்த சந்தர்ப்பத்தில் இன்னொரு சிறப்பு சம்பவமும் நடந்தது. தர்ம சாஸ்திரத்தின் நிரூபணமும் ஆயிற்று. 'பஞ்சம்யந்தா: ஷுபாவஹா:'. ஆஷாட கிருஷ்ண பஞ்சமி வரைக்குமான திதிகள் சன்யாசிகளுக்கு சாதுர்மாத விரதத்திற்கு அமர்வதற்கான நாட்களாக இருக்கின்றன. கிருஷ்ண பிரதமையிலிருந்து பஞ்சமி வரைக் குமான திதிகள் சிறந்தவை என்று ஒரு நியமம் இருக்கிறது. அனைவரும் இந்த வாக்கியத்திற்கு இதே போலவே பொருளைத் தருகின்றனர்.

ஸ்ரீசத்யவீர தீர்த்தருக்கு ஒரு பெரிய பிரச்னை வந்திருந்தது. மதராஸில் நடைபெறவிருந்த 'விதவை மறுமண கண்டனம்' சபைக்கு தமது திக்விஜயங்கள், பயணங்கள், வேலைகளை என அனைத்தையும் விட்டுவிட்டு போகவேண்டியிருந்தது. ஆஷாட கிருஷ்ண பஞ்சமிக்குள் மதராஸ் அடைந்து, அங்கேயே சாதுர்மாச விரதத்திற்கு அமரவேண்டியதாக இருந்தது. ஆனால், அந்த காலத்தில் இன்று போல வேகமாக செல்லக்கூடிய மோட்டார் வாகனங்கள் இருந்திருக்கவில்லை. ஆகவே மெதுவாக பயணித்து வந்துகொண்டிருக்கையில், இரு அத்வைத பண்டிதர்கள் வாக்யார்த் தத்திற்கு வந்தனர். வாக்யார்தத்தை விட்டு முன்னர் சென்றால், கடமை தவறிய தோஷம், கெட்ட பெயர். அத்துடன் மத்வ சாஸ்திரமும், ஸ்ரீகளவரும் தோற்றுவிட்டனர் என்று குறை கூறுவார்கள். அதே அவர்களுடன் வாக்யார்தத்திற்கு நின்றால், பஞ்சமிக்கு முன்னர் மதராஸ் அடைவது சாத்தியமில்லை. மிகவும் சிரமமான நேரம்.

அத்வைதிகளுடன் வாதம் செய்து, மத்வமதத்தின் சிறப்பு களை நிறுவி, ஜெயபத்திரம் பெறுவதே முக்கியம் எனக் கருதி, ஸ்ரீகளவர் வாக்யார்தத்திற்கு தயாரானார். இரு நாட்கள் நடந்த வாக்யார்த்தத்தில் அத்வைதிகள் பதில் அளிக்கமுடியாமல் தோற்றனர். அவர்களின் கேள்விகளுக்கு மிகவும் ஆதாரபூர்வமான, ஆணித்தரமான பதில்களை ஸ்ரீகளவர் கொடுத்தார்.

முன்னர் ஸ்ரீகளவர் மதராஸின் முக்கிய வாக்யார்தத்திற்கு ஆஷாட கிருஷ்ண சப்தமி மாலையில் வந்து சேர்ந்தார். தசமியன்று

சாதுர்மாசத்திற்கு அமர்ந்தார். ஸ்ரீகளவர் வந்தபோது அவருக்கு தடபுடலான வரவேற்பு அளிக்கப்பட்டது. ஊர்வலத்திற்குப் பிறகு, ஸ்ரீகளவரை வரவேற்றுப் பேசியபோது சரடி மாதவராயர் 'நம் மேல் இருக்கும் பரமானுக்கிரகத்தினால், தமது ஆசிரமத்திற்கு பாதிப்பு ஏற்பட்டிருக்கும்போதும் ஸ்ரீகளவர் நமக்காக இங்கு வந்திருக்கிறார். இது நமது பாக்கியமே. இதுவே ஸ்ரீகளவரின் கருணை' என்றார்.

இதற்கு ஸ்ரீகளவர் உடனடியாக பதிலளித்தார். 'மாதவராயரின் பேச்சைக் கேட்டேன். அவர் எப்படி புரிந்துகொண்டிருக்கிறார் என்பதை அறிந்தேன். தர்மசாஸ்திரத்தைப் பற்றி தவறான புரிதலைக் கொண்டிருக்கிறார். 'பஞ்சம்யந்தா: ஷுபாவஹா:' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், இன்று சப்தமி, சாதுர் மாசத்திற்கு அமர்வதற்கு இரண்டு நாட்கள் தாமதம் ஆகியிருக்கிறது என்று நினைக்கிறார். ஆனால், அந்த வாக்கியத்திற்கு அப்படி பொருள் கொள்ளக்கூடாது'.

**''பஞ்ச-மே-அந்தா: பஞ்ச-ம்யந்தா: சுபாவஹா:''** அதாவது, 'மே', இறுதியாக வரும் திதிகள் சாதுர்மாதத்திற்கு உகந்தவை சிறந்தவை என்று பொருள். அதாவது பிறகு வரும் திதிகள். சஷ்டி, சப்தமி, அஷ்டமி, நவமி, தசமி - ஆகிய நாட்கள். இந்த ஐந்து நாட் களும் உகந்தவையே. இந்த ஐந்து நாட்களில் என்று வேண்டு மானலும் சாதுர்மாதத்திற்கு அமரலாம் என்று இருக்கிறது. ஆகவே, நமது ஆசிரம நியமங்களுக்கு எவ்வித பாதிப்புகளும் வரவில்லை' என்றார். ஸ்ரீகளவர் புன்னகையும் விவரித்த இந்த விஷயங்களைக் கேட்டு அனைவரும் வியப்படைந்தனர். மகிழ்ச்சியடைந்தனர். ஸ்ரீசத்யவீரரின் வாக் சாதுர்யம் மற்றும் சித்தாந்த தீக்ஷை இப்படியாக இருந்தது. அன்றிலிருந்து மடத்து பீடாதிபதிகள் அனைவரும் இதே வழிமுறையையே பின்பற்றி வருகின்றனர். இதுவே உத்தராதி மடத்து சம்பிரதாயமாகவும் வந்திருக்கிறது. இப்படி ஒரு சம்பிரதாயத்தையே நிறுவியவர் ஸ்ரீசத்யவீரர்.

ஸ்ரீகளவர் திருப்பதி யாத்திரையை முடித்து, தொடர்ந்து ராமேஸ்வர யாத்திரையை செய்வதற்கு தீர்மானித்தார். எப்போதும் பாட பிரவசனங்களின் மேலேயே அதிக கவனம் வைத்திருந்தார். இது பரமஹம்ஸ பீடாதிபதிகளின் முக்கிய கடமையே ஆகும். 'ஸோபாசனாச த்விவிதா சாஸ்திராப்யாஸ ஸ்வரூபிணி' என்று

தந்திரசாரத்தில் ஸ்ரீமதாசார்யர், சாஸ்திர பாட பிரவசனங்களை, ஸ்ரீஹரியின் உபாசனையின் ஒரு விதம் என்று சொல்லியிருக்கிறார். இந்த உபாசனையிலேயே மூழ்கியவர் ஸ்ரீசத்யவீரர். அனைத்து பாடபிரவசனங்களுக்கும் அதிக நேரம் செலவழிக்க வேண்டும் என்பதற்காக, ஸ்ரீகளவர் தேவபூஜையையும் விதிப்படி எவ்வளவு விரைவாக முடிக்கமுடியுமோ, அப்படி முடித்து வந்தார். இது பண்டிதர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவரது பாடபிரவசனம், வாக்யார்த்த புலமையைக் கண்டு பெருமை அடைந்தனர். ஆனால் சாதாரண கிருஹஸ்தர்களுக்கு இது மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை. 'ஸ்ரீகளவர் பூஜையை மிகவும் விரைவாக முடித்துவிடுகிறார். அவரே விதிகளை மீறினால், நம் கதி என்னாவது ?' என்றெல்லாம் பேசத் துவங்கினர்.

ஸ்ரீகளவர் பண்டிதர்களுக்காக அதிக செலவு செய்வதில்லை. பணத்தை மிச்சம் பிடிக்கிறார் என்று சிலர் பேசிக்கொண்டனர். ஸ்ரீசத்யபராக்ரமரிடம் சிஷ்யராக அவரிடம் சர்வமூலங்களைப் படித்த திவான் காஞ்சி சுப்பராவ் இப்படியாக பேசுகிறார் என்று சிலர் ஸ்ரீகளவரிடம் கூறினார்கள். ஸ்ரீமடத்தின் சிஷ்யரான சுப்பாராவ், ஒரு முக்கியமான ஆளுமை. ஸ்ரீசத்யபராக்ரமரின் ஆணைப்படி தாம் சம்பாதித்த அனைத்து செல்வங்களையும் செலவழித்து, திருச்சானூரில் மத்வ சித்தாந்த ஒன்னாஹினி சபையை நிறுவினார். ஒவ்வொரு ஆண்டும், இந்தியா முழுக்க அனைத்து பண்டிதர்களையும் அழைத்து அனுவாத, வாக்யார்த்த, வாத பிரதிவாதங்கள், அவர்களுக்கு பஞ்சபக்ஷ பரமான்னங்களை உணவளித்து, கை நிறைய தக்ஷிணைகளை கொடுத்து வந்தார். அனைத்து பண்டிதர்களும் தத்தம் மாணவர்களை அங்கு தேர்வுக்காக அழைத்து வந்தனர். அப்படி ஆயிரக்கணக்கிலான மாணவர்களின் தேர்வு, அவர்கள் அனைவருக்கும் சம்பாவனை, பயணப்படி என வழங்கி வந்தார். இத்தகைய சுப்பராயரைப் பற்றிய குற்றச்சாட்டு இது.

சுப்பராயரின் சபைக்கு பண்டிதர் யாரும் போகக்கூடாது என்று ஸ்ரீகளவர் ஆணையிட்டார். மடாதிகாரிகளும் அனைவருக்கும் கடிதம் எழுதி இதை தெரிவித்தனர். அந்த ஆண்டின் மகா சமாராதனையை ஸ்ரீகளவர் மிகவும் விமரிசையுடன் நடத்தினார். அனைத்து பண்டிதர்களுக்கும் தங்க, வெள்ளிகளுடன் அன்றைய

காலகட்டத்திலேயே நூறு ரூபாய்க்கும் மேற்பட்ட சம்பாவனை வழங்கினார். சாஸ்திரத்தை படிக்கும் அனைத்து மாணவரையும் அதிகமாக புகழ்ந்து, கை நிறைய சம்பாவனை வழங்கினார். அந்த ஒரு ஆண்டின் மகாசமாராதனையின் செலவு மட்டும் ஒரு லட்ச ரூபாயாக இருந்தது.

ஸ்ரீகளவரின் தினப்படி நடவடிக்கையே அபூர்வமாக இருந்தது. தினமும் 72 மகாமந்திரங்களின் ஜபம், மூன்று வேளை ஸ்னானம், விதிப்படி நடக்கும் பூஜை, பாராயணம், பாட பிரவசனங்கள் இவை அனைத்தும் தவறாமல் நடந்தன.

காஞ்சி சுப்பராயரின் சபைக்கு அந்த ஆண்டு அதிகமான பண்டிதர்கள் செல்லவேயில்லை. மடாதிகாரி ஷ்யாமாச்சார், பண்டிதர்களுக்கு ஆதரவாக பேசினார். ஆனால் ஸ்ரீகளவர் அதற்கு ஒப்பவில்லை. இதை அறிந்த பண்டிதர்கள் சபைக்கு போக வில்லை. சிலர் மட்டும் போயிருந்தனர். அவர்களுக்கு மடாதிகாரி அபராதம் விதித்தார். இந்த விஷயங்கள் சுப்பராவிற்கு முதலில் தெரிந்திருக்கவில்லை. பின்னரே அறிந்தார். காஞ்சி சுப்பராவ், திவான் பஹதூர் ரகுநாதராயர், சஞ்சலராயர் ஆகியோர் ஸ்ரீமடத்திற்கு வந்து ஸ்ரீகளவரை தரிசனம் செய்தனர். தாம் என்றும் அத்தகைய பேச்சுகளை பேசவில்லை என்று சொல்லி ஸ்ரீகளவரிடம் மன்னிப்பு கேட்டனர்.

ஸ்ரீகளவரும் அவர்களை பெருந்தன்மையுடன் மன்னித்தார். ஸ்ரீசுப்பராயர் இப்படியாக வேண்டினார். ‘ஸ்வாமி, நான் மத்வ மதத்தின் அபிமானியாகி, அந்த திவ்ய சித்தாந்தத்தின் பிரசாரத் திற்காக, தங்களது குருகளின் ஆணைப்படி இந்த சபையை நிறுவினேன். இதற்கு ஸ்ரீமடத்து சிஷ்யர்கள் அனைவரும் பரந்த மனதுடன் அதிக உதவிகளை செய்திருக்கின்றனர். கிரமமாக நடந்து வரும் சபையின் நடவடிக்கைகளைக் கண்டு பொது மக்களும் சபையின் மேல் அபிமானம், மரியாதை வைத்திருக் கின்றனர். இது தங்களுடைய வேலையே. தமது ஆணைப்படியே, ஸ்ரீமடத்து சிஷ்யரான நான் இதை நிர்வகித்து வருகிறேன். இந்த அனைத்தும் தங்களையே சேரும். தங்களின் ஆணைப்படியே / விருப்பப்படியே இங்கு அனைத்து வேலைகளும் நடைபெற்று வருகின்றன. தாங்கள் என்றென்றும் இந்த சபைக்கு அருள

வேண்டும். தங்களின் குருவே இங்கு ஸ்ரீவேதவியாசரை பிரதிஷ்டை செய்திருக்கிறார்' என்று வேண்டிக்கொண்டார். ஸ்ரீகளவர் அவருக்கு மந்திராக்ஷதை கொடுத்து ஆசிர்வதித்து, இந்த சபை பற்பல நூற்றாண்டுகளுக்கு இருந்து, சித்தாந்தத்தின் வளர்ச்சிக்காக, பிரசாரத்திற்காக பாடுபடட்டும் என்று அருளினார். இந்த திருச்சானூர் மத்வ சித்தாந்த ஒன்னாஹினி சபாவை துவக்கிய ஸ்ரீசத்யபராக்ரமரில் துவங்கி, இன்றுவரை உத்தராதி மடத்து அனைத்து பீடாதிபதிகளும் தங்களது தலைமையில் மேற்பார்வை யில், அந்த சபாவின் நடவடிக்கைகளை அருமையாக நடத்தி வருகின்றனர். மாத்வ சமூகத்திற்கு, உத்தராதி மடாதீசரும் அவரது சிஷ்யர்களும் வழங்கிய மிகப்பெரிய பரிசு, இந்த சபா.

திருப்பதியிலிருந்து ராமேஸ்வரத்திற்குப் போகும் வழியில், ஸ்ரீகளவர் ஸ்ரீசத்யவிஜய நகரத்திற்கு வந்தார். ஸ்ரீமத் உத்தராதிமட பீடத்தை அலங்கரித்த ஸ்ரீசத்யவிஜயதீர்த்தரின் மூலபிருந்தாவனம் இருக்கும் இடம் அது. அவரது சிஷ்யரான மகாராஜா, குருவின் பெயரையே அந்த ஊருக்கு வைத்தார். அந்த ஊருக்கும், அந்த ஊரின் ரெயில் நிலையத்திற்கும் இன்றும் 'சத்யவிஜய நகரம்' என்றே பெயர் இருக்கிறது. ஒரு பெரிய ஊர், மத்வ மட பீடாதி பதியின் பெயரிலேயே அழைக்கப்படுகிறது என்பது நமக்கு மிகவும் பெருமைக்குரிய விஷயமாகும். ஸ்ரீமத் உத்தராதி மடத்திற்கு பெருமை சேர்க்கும் விஷயங்களில் இதுவும் ஒன்று.

ஸ்ரீசத்யவிஜயதீர்த்தரின் பூஜைகளை முடித்து, ஸ்ரீசத்யவீர தீர்த்தர், 'ஆரணி' சம்ஸ்தானத்திற்கு திக்விஜயம் செய்தார். மகாராஜா ஸ்ரீவெங்கடபதி ராஜர், ஸ்ரீமடத்து சிஷ்யர் ஆவார். இந்த அரசரின் முந்தைய தலைமுறையினர், ஸ்ரீமடத்திற்கு ஒரு பெரிய தங்க கங்காளத்தை அர்ப்பித்திருந்தனர். சிராவண மாதத்தில் ஸ்ரீமூல ஸ்ரீசீதாதேவியருக்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், சேமியா பாயசத்தை செய்து நிவேதனம் செய்வதற்காக ஒரு பெரிய பாத்திரத்தைக் கொடுத்திருந்தனர்.

இன்றும் அந்த பெரிய கங்காளத்தை ஸ்ரீமடத்தில் காண முடியும். மூலராமரின் பூஜையை அன்று அரண்மனையில் செய்யுமாறு மகாராஜர், ஸ்ரீகளவரிடம் விண்ணப்பித்தார். சிறப்பான பூஜை, தீர்த்தபிரசாதம் ஆகியவை மிகவும் விமரிசையுடன்

நடைபெற்றன. ஆரணி மகாராஜருக்கு பிறந்த ஆறு குழந்தைகளும் பெண்களாகவே இருந்தனர். ஒரு ஆண் வாரிசு வேண்டும் என்று ராஜர் ஆசைப்பட்டார். இது சகஜமான ஆசையே. இதற்காக பல்வேறு தீர்த்த யாத்திரைகளை செய்தார். பல பேரின் ஆசிகளைப் பெற்றார். பல்வேறு விரத நியம சேவைகளை செய்தார். ஆனாலும் அவை பயன் தரவில்லை. அவருக்கு ஆண் வாரிசு பிறக்கவே யில்லை. மந்திர, தந்திர, யந்திரங்களை செய்வித்தார். மந்திர வாதிகளை அழைத்திருந்தார். ஆனாலும் எந்த பயனும் இல்லை. இது அவரது மனதில் ஒரு மிகப்பெரிய சோகத்தைக் கொடுத் திருந்தது.

ஸ்ரீமூலராமரின் பூஜை, தீர்த்தபிரசாதங்களுக்குப் பிறகு, மகாராஜா மற்றும் ராணி இருவரும்,ஸ்ரீசத்யவீரரிடம் வந்து தங்களுக்கு இருந்த மனக்குறையினை சொல்லி முறையிட்டனர். அவர்களுக்குஅருளுமாறு வேண்டிக் கொண்டனர். ஸ்ரீகளவர், ஸ்ரீமூலராம, ஸ்ரீதிக்விஜய ராமசந்திரரை தியானித்து,இரு முறை மந்திராக்ஷிதையை அருளினார். ஹரிவாயுகுருகளின் அருளினால், ஒராண்டிலேயே அவர்களுக்கு ஆண் குழந்தை பிறக்கும் என்று ஆசிர்வதித்தார். மகாராணிக்கு மிகவும் சந்தோஷமாயிற்று. மகாராஜா ஸ்ரீகளவரை வணங்கினார். தமக்கு ஏற்பட்ட மகிழ்ச் சியைக் கூறினார். ஆனாலும், ராஜரின் மனதில் ஒரு மூலையில் சிறு சந்தேகம் இருந்தது. இவ்வளவு நாள் எவ்வளவோ முயற்சிகள் செய்தும் கிடக்காத பலன், தற்போது எப்படி கிடைக்கும்? என்று நினைத்தார்.

ஜோதிடர்களிடம் விசாரித்தபோது, இந்த முறையும் பெண் குழந்தையே பிறக்கும் என்று அவர்கள் கணித்தனர். ஆனால், ஸ்ரீகளவரின் தவம், ஸ்ரீஹரியின் விருப்பம் இவற்றிற்கு எதுவும் சாத்தியமே. ஸ்ரீகளவர் முக்காலும் உணர்ந்த ஞானிகள். ராஜரின் மனதின் நிலையை புரிந்துகொண்டார். 'இதுஸ்ரீராமனே கூறியதாகும். ஸ்ரீராமன் மகிழ்ச்சி அடைந்திருக்கிறான். அவனின் விருப்பமே முக்கியம்.உங்களுக்கு கண்டிப்பாக மகன் பிறப்பான்' என்று ஆசிர்வதித்தார்.

ஸ்ரீசத்யவீரர் அங்கிருந்து, கும்பகோணம் வழியாக ராமேஸ் வரம் வந்து சேர்ந்தார். ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணத்தில், ஸ்ரீமடத்திற்கு

தக்க மரியாதைகளை பெற்றுக்கொண்டு, ஸ்ரீமுஷ்ணத்தில், பிரம்மகரார்ச்சித உத்ஸவ மூர்த்தியை, ஸ்ரீமத் உத்தராதி மடத்தில் பிரம்ம கரார்ச்சித மூலராமனுடன் சேர்த்துபூஜித்தார். சுயம்புவான ஸ்ரீபூவராக தேவனின் சன்னிதானம் இருக்கும் ஸ்ரீமுஷ்ணத்தில் ஸ்ரீமத் உத்தராதிமடத்திற்கு உத்ஸவ மூர்த்தியை, ஸ்ரீகளவர் வரும்போது அவரிடம் ஒப்படைக்கும் சம்பிரதாயம்இருக்கிறது. அதை பின்பற்றி, பூவராக தேவரை பூஜித்து, பற்பல தீர்த்த க்ஷேத்திரங்களில் ஸ்னானம்,பகவத் தரிசனத்தைப் பெற்றவாறு, பாட பிரவசனங்களையும் செய்தவாறு, ஸ்ரீகளவர் ராமேஸ்வரத் திற்கு வந்தார்.

சமுத்ர ஸ்னானம், சேது தரிசனம், சேதுராமனின் தரிசனம் ஆகியவற்றை செய்து, பின்மானாமதுரைக்கு பயணம் மேற் கொண்டார். ஸ்ரீகளவர் இத்தகைய யாத்திரையை முடித்து திரும்பி வருவதற்கு சுமார் 9-10 மாதங்கள் ஆகிவிட்டன. அதற்குள் ஆரணி மகாராஜாவிடமிருந்து செய்திவந்திருந்தது. 'ஸ்ரீபாதங்களவரின் அருளினால், ராணி ஆண் குழந்தையைப் பெற்றிருக்கிறார். இதுஸ்ரீமூலராமனின் பரமானுக்கிரகம். ஸ்ரீபாதங்களவரின் ஆசிர்வதத்தின் பலம். ஸ்ரீபாதங்களவர் மற்றும்ஸ்ரீமூலராமனின் சன்னிதானத்திலேயே குழந்தைக்கு நாமகரணம் செய்யவேண்டு மென்று விரும்புகிறேன். அதற்காக ஸ்ரீபாதங்களவர் மறுபடி நம் ஆரணி சம்ஸ்தானத்திற்கு வரவேண்டும் என்று வேண்டுகிறேன்' என்று ராஜர் கடிதம் எழுதியிருந்தார்.

ஸ்ரீகளவரும் ஆரணிக்கு வந்து, அரண்மனையிலேயே ஒரு மாதம் வரை தங்கியிருந்தார். ஸ்ரீசத்யவீரரின் அருளினால் தனக்கு பிறந்த குழந்தையாகையால், மகாராஜா, அக்குழந்தைக்கு 'சத்யவீரன்' என்றே பெயரிட்டார். ஸ்ரீகளவருக்கு தங்கம் மற்றும் ரத்ன ஆபரணங்கள் பலவற்றைதானமாக அளித்தான். 12,000 வெள்ளி ரூபாய்களை அர்ப்பித்தான். ஸ்ரீகளவர், நிரந்தரமாக தனக்கு அருள வேண்டுமென்று வேண்டினான். மகாராஜாவின் மகனான சத்யவீரன், பின்னர் அந்தசம்ஸ்தானத்தை மிகவும் விமரிசையுடன் ஆண்டான் என்பது வரலாறு. ஹரிவாயுகளின் அருளுக்கு பாத்திரமானான்.

ஸ்ரீசத்யவீர தீர்த்தர், ஆரணி சம்ஸ்தானத்தில் இருந்தபோதே ஸ்ரீமடத்தின் அனைத்து ஆபரணங்கள், ஆபூஷணங்கள்,

மண்டபங்களின் விவரங்கள், ஆகியவற்றின் ஒரு பட்டியலை தயாரித்தார். அவற்றின் எண்ணிக்கையை கணக்கெடுத்து பத்திரப்படுத்தினார். ஸ்ரீமடத்தின் நிர்வாகத்தில் பல மாற்றங்களை, நியமங்களை, வழக்கில் கொண்டு வந்தார்.

அப்போது இன்னொரு அற்புத சம்பவம் நடைபெற்றது. அப்போது மடாதிகாரியாக இருந்த ஷாமாச்சார்யரே நிர்வாகத்தை நடத்திக் கொண்டிருந்தார். ஸ்ரீகளவர் பாட பிரவசனங்கள், ஜபதபாதிகளில் அதிக கவனம் செலுத்துவதற்காக, மடத்து நிர்வாகத்தினை தம்மிடம் ஒப்படைத்திருப்பதாக சொல்லி, ஸ்ரீகளவர் வெறும் அர்ச்சகரே. அதற்கு மேல் அவருக்கு எவ்வித அதிகாரமும் இல்லை என்றும் சொல்லலானார் ஷாமாச்சார். மடத்து இதர நிர்வாகிகள், ஷாமாச்சாருக்கு எதிராக இணைந்தனர். பிரச்னைகள் துவங்கின. மடத்து அனைத்து செல்வங்களும், அதிகாரமும் தம்முடையதே, எந்தவித ஆதாரமும் ஸ்ரீகளவரிடம் இல்லை என்று சொல்லத் துவங்கினார். ஒரு கட்டத்தில் இதை பொறுத்துக் கொள்ள முடியாத இதர நிர்வாகிகள், இவரை மடத்திலிருந்து துரத்தினர். அவரின் அனைத்து அதிகாரங்களையும் ஒடுக்கினர்.

ஷாமாச்சார்யர் மேல் வழக்கு தொடர்ந்தனர். அன்றைய அரசாங்கத்திடமும் உதவி கோரினர். இந்த வழக்கு மதராஸ் நீதி மன்றத்திற்கு வந்தது. இவற்றிற்காக அதிக பணமும் செலவாயிற்று. இறுதியில் தீர்ப்பு ஸ்ரீகளவருக்கு சாதகமாகவே வந்தது. சிறிது பணத்தைப் பெற்றுக்கொண்டு, ஷாமாச்சார் மடத்தை விட்டு, அதிகாரத்தை விட்டு, வெளியேறினார். ஆனால், இந்த கெட்ட செயல்களின் விளைவினை, இன்றும் அந்த வம்சத்தவர்கள் அனுபவித்து வருகின்றனர். தேவஸ்வம், பிரம்மஸ்வம் என்பது ஒரு பெரிய நெருப்பு. அதை யாரும் அபகரிக்க நினைத்தால், அவர் களையே அது சுட்டுவிடும். பாகவதத்தின் இந்த வாக்கு என்றைக்கும் பொருந்தும்.

இந்த வெற்றியினால், மடத்தின் வளர்ச்சிக்கும், பாட பிரவசனத்திற்கும், பண்டித பூஜைகளுக்கும் அனுகூலமாயிற்று. தென்னிந்திய யாத்திரையை முடித்துக்கொண்ட ஸ்ரீசத்யவீரர், மறுபடி மதராஸ்க்கு வந்தார். அந்த சமயத்தில் மதராஸ் நகரில்

காலரா நோய் பரவியிருந்தது. அந்த நோய்க்கு தினமும் நூற்றுக்கும் மேற்பட்டோர் பலியாகிக் கொண்டிருந்தனர். மதராஸின் முக்கிய சிஷ்யர்கள் ஸ்ரீகளவரிடம் வந்து வேண்டினர். ஸ்ரீகளவரின் மனமும் இவற்றைக் கண்டு கலங்கிற்று. அவர் ஸ்ரீமூலராமனின் விசேஷ பூஜையை செய்து, அவரது பிரார்த்தனையை சமர்ப்பித்தார். ஸ்ரீராமனின் விசேஷ பூஜைக்காக ஒரு லட்ச ரூபாயை ஒதுக்கி வைத்தார். தமது உபாசனை பிராணதேவருக்கு தினமும் தேன் அபிஷேகம் செய்து வாயுஸ்துதியின் புனஸ்சரணம் செய்வித்தார். மதலகட்டி பிராணதேவரை வணங்கினார்.

இதற்கு நடுவில், மடத்து சிஷ்யர் ஒருவரின் மகனுக்கே இந்த காலரா நோய் வந்துவிட்டது. பெற்றோர் கவலைப்பட்டனர். தமது மகனை காப்பாற்ற வேண்டுமென்று ஸ்ரீகளவரில் வேண்டிக் கொண்டனர். ஸ்ரீகளவரும் முக்யபிராண தேவரை வணங்கி, அவர்களுக்கு மந்திராக்ஷதை வழங்கினார். 'ஸ்ரீராமதூதன் காப்பாற்றுவான். பயப்படாதீர்கள்' என்று ஆறுதல் கூறினார். அந்த மந்திராக்ஷதையை மகன் தலைமேல் வைக்குமாறு கூறினார்.

மறுதினம் விடியல். அந்த சிறுவன் ஒரு விசித்திர கனவினைக் கண்டான். ஒரு பெரிய அரக்கி, அந்த சிறுவனின் வீட்டினருகில் வந்து கொண்டிருந்தாள். அனைவரும் அவளைக் கண்டு பயப் பட்டனர். பயந்து ஓடினர். அப்போது மடத்திலிருந்து வந்த பல குரங்குகள் அவளை சூழ்ந்தன. மிகப்பெரிய குரங்கு ஒன்று அவளை தன் வாலினால் கட்டிப் போட்டது. அந்த அரக்கி தோற்றுப் போய் ஓடத் தொடங்கினாள்.

இந்த விஷயத்தை அந்த சிறுவன், எழுந்தவுடன் தனது பெற்றோருக்கு தெரிவித்தான். அவர் இதை ஸ்ரீகளவரிடம் தெரிவித்தார். இது ஸ்ரீராமனின் கருணை மற்றும் ஸ்ரீமதாசார்யரின் அருள் என்றும் கூறினார் ஸ்ரீகளவர். 'உன்னத: பிரார்த்திதா அசேஷ சம்சாதகம்' (த்வாதச ஸ்தோத்திரம்). பெரிவர்களை வணங்கினால் அனைத்தும் நல்லதே நடக்கும் என்ற வாக்கு அனைவரின் அனுபவத்திற்கும் வந்தது.

ஸ்ரீகளவரின் தவ வலிமை அனைத்து திசைகளுக்கும் பரவியது. போகும் இடங்களிலெல்லாம் மக்கள் அவரை அபார பக்தியினால், மரியாதையினால் கௌரவித்தனர்.

*ஸ்ரீகளவர் மதராஸில் இருந்தபோது இன்னொரு அற்புத சம்பவம் நடந்தது. ஸ்ரீசத்யபராக்ரம தீர்த்தரின் வித்யா சிஷ்யர் மற்றும் ஸ்ரீசத்யவீர தீர்த்தரின் சிஷ்யருமான, மதராஸ் விதவை மறுமண சபையில் பங்கு வகித்து ஸ்ரீசத்யவீர தீர்த்தரின் அருளுக்கு பாத்திரரான ஜமகண்டி வாதிராஜாச்சார், ஸ்ரீவாதிராஜரின் ருஜுத்வத்தைப் பற்றி பேசி, அதை அனைவரும் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும் என்று வாதிட்டார். அதற்கு ஏற்றார்போல, கோபி சந்தன ஊர்த்வ புண்ட்ரம் அணிந்தபிறகு, அதன்மேல் ஸ்ரீவாதி ராஜரின் மிருத்திகையை அனைவரும் இட்டுக்கொண்டே ஆக வேண்டும் என்று கூற ஆரம்பித்தார். ஸ்ரீகளவர் முதலில், இது அவரவரின் நம்பிக்கை என்று சொல்லி, இதைப்பற்றி கண்டு கொள்ளாமல் இருந்தார்.*

*ஆனால், ஜம்புகண்டி ஆசார்யர் ஸ்ரீமடத்து அனைத்து சிஷ்யர்களும் இதை பின்பற்றியே ஆகவேண்டும் என்று கட்டாயப் படுத்தியதால், அனைத்து சிஷ்யர்களும் சேர்ந்து இதைப் பற்றி ஸ்ரீகளவரின் கருத்து என்னவென்று கேட்க, அதனால் ஸ்ரீகளவரும் தன் கருத்தினை சொல்லும் கட்டாயத்திற்கு தள்ளப்பட்டார்.*

*ருஜுத்வ விஷயத்தில் சாஸ்திரிய பிரமாணங்கள் எங்கும் இல்லை. ஸ்ரீவாதிராஜர் தமது எந்த கிரந்தத்திலும் இதை சொல்லவே இல்லை. இவர் இன்னொரு பிராமணரின் கனவில் வந்து இப்படியாக சொன்னார் என்று சொல்லும் கிரந்தம், இவர் பிருந்தாவனப் பிரவேசம் செய்து 100 ஆண்டுகளுக்குப் பிறகு இயற்றப்பட்டிருக்கிறது. இதையே ஆதாரமாகக் கொண்டால், அனைத்து சிஷ்யர்களும், தத்தம் குருகள் தமது கனவில் வந்து தாமே ருஜு என்று சொன்னார் - என்னும் நிலை வரக்கூடும். அவரவரின் கனவு, அவரவர்களுக்கு மட்டுமே பிரமாணம். மற்றவருக்குல்ல. ஸ்ரீவாதிராஜரின் காலத்திற்குப் பிறகு வந்த அனைத்து டிப்பணிகாரரும், கிரந்தகாரரும், அபரோக்ஷ ஞானி களும், எங்கும் இந்த விஷயத்தை எழுதவில்லை. இது மட்டு மல்ல, தங்களின் கிரந்தங்களின் துவக்கத்தில் எங்கும் ஸ்ரீவாதி ராஜரை வணங்கவில்லை. ஸ்ரீடீகாராயரை, ஸ்ரீவியாசராஜரை அனைவரும் வணங்கியிருக்கின்றனர். ஸ்ரீவாதிராஜர் ருஜுகளாகிருக்கிறார் என்றால், ஸ்ரீமத்வாசார்யருக்குப் பிறகு இவரையே அனைவரும் வணங்கியிருக்க வேண்டும். அதையும் யாரும் செய்யவில்லை.*

*ஸ்ரீரகூத்தம தீர்த்தர், ஸ்ரீவித்யாதீச தீர்த்தர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள், ஸ்ரீரகுநாத தீர்த்தர் (சேஷசந்திரிகாசார்யர்), ஸ்ரீஜகன்னாத யதிகள், ஸ்ரீசத்யதர்மர், ஸ்ரீவேதேச தீர்த்தர், ஸ்ரீவாதீந்த்ர தீர்த்தர் (குருகுணஸ்தவன இயற்றியவர்), ஸ்ரீவியாசதத்வக்ஞர், ஸ்ரீயாத வார்யர் ஆகியோர் எந்த கிரந்தங்களிலும் இந்த விவரத்தை எழுத வில்லை. இதை இவர்கள் யாரும் பழக்கத்திற்கும் கொண்டு வரவில்லை. அபரோக்ஷ ஞானிகளான தேவாம்சரான ஸ்ரீவாதி ராஜரைப் பற்றி இவர்களுக்கெல்லாம் பெரிய மரியாதை இருக் கிறது. அவரது பிருந்தாவனத்திற்கு நமஸ்காரமும் செய்திருக்கலாம். ஆனால் ருஜுத்வத்தைப் பற்றி கிரந்தங்களில் எங்கும் சொல்ல வில்லை. இதைப் பற்றி தெரிந்து கொள்ளுங்கள் என்றும் சொல்ல வில்லை. ஆகவே இந்த அனைத்து ஞானிகளின் அபிப்பிராயமே நமது அபிப்பிராயம். அவர்கள் என்ன செய்தார்களோ அதையே நாமும் செய்கிறோம். ஸ்ரீவாதிராஜர் ருஜுகளின் எந்த லட்சண ஆதாரங்களையும் கொண்டிருக்கவில்லை ஆகையால் அனைத்து மடங்களின் சம்பிரதாயத்துக்கு தக்கவாறு அவரை ஒரு அபரோக்ஷ ஞானி என்றே நினைத்து வணங்கவேண்டும் என்றார்.*

*ஆகையால், ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீடீகாராயர், ஸ்ரீரகுநாத தீர்த்தர், ஸ்ரீபாதராஜர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர் ஆகியோரின் ஆசிரம காலம் மற்றும் மகிமைகளுக்கு எந்தவித குறையும் இல்லை. இருந்தவர்களை இல்லை என்று சொன்னாலோ, இல்லாதிருப்பதை இருக்கிறது என்று சொல்வதாலோ வரக்கூடிய தோஷம் இந்த விதமான உபாசனையில் எப்போதும் வருவதில்லை. ஆகையால், ருஜுகள் என்று அறியாமல், அபரோக்ஷ ஞானிகள், பூஜ்யர், உபாஸ்யர், வணங்கக்கூடியவர், பற்பல கிரந்தங்களை இயற்றியவர், அற்புத மகிமைகளை செய்தவர், மகாதபஸ்விகள் என்று ஸ்ரீவாதி ராஜரைப் பற்றி அறிந்து உபாசனை செய்யுமாறு ஸ்ரீசத்யவீரர் தெரிவித்தார். ஆனால், மறுபடி இதற்கு எதிராக ஜம்புகண்டி ஆசார்யர் ஆவேசப்பட்டபோது, ஸ்ரீகளவர் சில பதிவுகளை வெளி யிட்டார் (ஆண்டு 1884). இதைப் பற்றி கேட்ட சிஷ்யர்களுக்காக 'மார்த்திக கர்வ நிர்வாபண' என்னும் கிரந்தத்தை இயற்றி வெளியிட்டார். இதனால் தனது பெயருக்கான பொருளை ஸ்ரீசத்யவீரர் மறுபடி நிலைநாட்டிக் கொண்டார். ஸ்ரீடீகாராயர் மற்றும் ஸ்ரீவாதிராஜரின் விசேஷ அருளுக்கு பாத்திரரானார். இந்த*

*சேவையை மதலகட்டி பிராணேசனுக்கு அர்ப்பித்து அவரின் அருளைப் பெற்றார்.*

*ஸ்ரீசத்யவீரர் சிறந்த தபஸ்வி. அவருக்கு மந்திர சித்தி இருந்தது. ஒரு முறை சிக்கோடியின் பண்டிதர் கொர்லஹள்ளி ஜயாசார்யர் தமது எட்டு வயது மகனை அழைத்துக்கொண்டு ஸ்ரீகளவரின் தரிசனத்திற்கு வந்தார். ஸ்ரீகளவரின் பாட பிரவசனங்களை கேட்டார். ஸ்ரீசத்யவீரரின் பார்வை எப்போதும் இந்த தந்தை மற்றும் மகனின் மேலேயே இருந்தது. ஒரு முறை பாடத்திற்கு அமர்ந் திருந்தபோது, மகன் சேதுராமன் தூரத்திலேயே அமர்ந்திருந்தான். குண்டு முகம், விசாலமான கண்கள், முகத்தில் பால பிரம்ம தேஜஸ். சிவந்த உடல், பார்த்தாலே வசீகரிக்கும் இந்த பாலகனைக் கண்டு அங்கிருந்த பண்டிதர்கள் அனைவருமே - இந்த தந்தை மகனின் பாக்கியமே சிறப்பாக இருக்கிறது - என்றனர். இந்தச் சிறுவன் பரமஹம்ஸ பீடாதிபதியாகி, வேதாந்த உலகின் மிகச் சிறந்த ஞானி என்று இந்த மகாபீடத்தை அலங்கரிப்பான் என்று ஸ்ரீசத்யவீரர் எதிர்காலத்தை கணித்தார். இந்த வாக்கு உண்மை யாகவே மாறி, ஸ்ரீசேதுராமன், ஸ்ரீசத்யத்யான தீர்த்தர் ஆனான். பெரியவர்களின் பேச்சு என்றும் பொய்யானதில்லை. 'வாசம் அர்தே அனுதாவதி' தானே?*

*ஸ்ரீசத்யவீரர் கர்னாடகத்தின் அனைத்து இடங்களுக்கும் பயணம் மேற்கொண்டு பின், பல்லாரிக்கு வந்தார். அங்கிருந்து துங்கா நதிக்கரை கொர்லஹள்ளிக்கு வருமாறு ஸ்ரீஹரியின் விருப்பம் இருந்தது. ஏழு ஆண்டுகள் தொடந்து திக்விஜயம் செய்து, தென்னிந்தியாவில் முழுவதுமாக பயணம் செய்து, அங்கங்கு மற்ற மதவாதிகளை கண்டித்து, ஸ்ரீமத் ஆனந்ததீர்த்தரின் சத் சித்தாந்தத்தை பிரசாரம் செய்து, ஸ்ரீசம்ஸ்தானத்தின் பக்தி வர்க்கத்தை, ஸ்ரீராமதேவரின் தரிசனம், முத்ராதாரணம், தீர்த்த பிரசாதம் மற்றும் சேவை இவற்றுடன் மேம்படுத்தி, இந்த அனைத்து சேவைகளையும் குலதெய்வமான மதலகட்டி பிராண தேவருக்கு அர்ப்பிப்பதற்கு பயணப்பட்டார்.*

*கொர்லஹள்ளியில் இருந்தபோது அங்கு பல பண்டிதர்கள் நிறைந்த ஒரு பெரிய சபையை நடத்தினார். தமது இந்த உலகின் பயணம் முடியும் நேரம் வந்துவிட்டது என்று புரிந்து*

கொண்டிருந்தார். அப்படியே, இதுவே தமது கடைசி சபை என்று சொல்லி, நாட்டின் அனைத்து பண்டிதர்கள், மாணவர்கள் என அனைவரையும் கொர்லஹள்ளிக்கு வருமாறு அழைப்பு விடுத்திருந்தார். போலவே நூற்றுக்கும் மேற்பட்ட பண்டிதர்கள், ஆயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள் என அனைவரும் வந்துவிட்டனர்.

ஸ்ரீசத்யவீரர், துங்கா நதிக்கரையில், வராகர் கோயிலில் அமர்ந்து, அனுவாத, வாக்யார்த்த மற்றும் தேர்வுகளை நடத்தினார். அனைவருக்கும் தங்க, வெள்ளி பாத்திரங்களை, சிறந்த வஸ்திரங்களை, சம்பாவனைகளை கொடுத்து ஆசிர்வதித்தார். இந்த மாதிரி சபைகள் நிரந்தரமாக நடக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு ஆண்டும் மடத்தின் சார்பாக சபை நடக்கவும் ஆணையிட்டார். த்வைத சித்தாந்தத்தை பரப்புவதற்காக ஒரு சபையை நிறுவினார்.

துங்கா நதியின் இந்த புனிதமான தலம். ஸ்ரீவாயுதேவரின் சன்னிதானத்திலேயே பிருந்தாவனத்தில் நுழைவதற்கு தீர்மானித்தார். தாம் இயற்றிய 'தத்வ ப்ரகாசிகா டிப்பணி' கிரந்தத்தை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தார். மொத்தம் ஐந்து கிரந்தங்களை இயற்றி, அவற்றை தம் சேவையாக குருகளுக்கு அர்ப்பித்தார்.

சாக்ஷாத் ஸ்ரீஹரியிடமிருந்தே துவங்கிய இந்த பரம்பரையின் அடுத்த உத்தராதிகாரி யார்? எப்போதும் வாதி-நிக்ரஹம், பாட பிரவசனம், அனுவாத, மாணவர்களை, பண்டிதர்களை கவனிக்க வேண்டும். இதற்கு பொருத்தமான, ஹரிவாயுகுருகளுக்கு சம்மதமான, அனைவரும் வணங்கக்கூடிய, அந்த ஆளுமை யார் என்று ஸ்ரீமூலராமரிடம் வேண்டினார். மிகச்சிறந்த பண்டிதரான சிக்கோடியின் கொர்லஹள்ளி ஜயாசார்யரிடம் இந்த சம்ஸ்தானத்தை ஒப்புவிக்கும்படி ஆணை வந்தது. உடனே ஜயாச்சார்யரை வரவழைத்து தனது முடிவையும் கூறினார். குருகளின் ஆணை, ஹரிவாயுகளின் விருப்பத்தை மீறும் தைரியம், ஜயாச்சார்யருக்கு இருந்திருக்கவில்லை.

வியாகரண, வேதாந்தங்களில் சிறந்த பண்டிதர் ஜயாச்சார்யர். அத்யந்த சாத்விகர். மிகப்பரந்த மனப்பான்மை. கருணை மிக்கவர். நூற்றுக்கும் மேற்பட்டவர்களுக்கு பாட பிரவசனம் செய்து, அவர்களை பண்டிதர்களாக தயார் செய்து, புகழ்பெற்றவர். கர்வம் இல்லாதவர். வைராக்யசாலி. ஆடம்பரம் இல்லாதவர்.

அனுவியாக்யான, தாத்பர்ய நிர்ணய ஆகியவற்றை தினந்தோறும் பாராயணம் செய்தவாறு ராமேஸ்வர யாத்திரையை செய்தவர். அதில் மகிழ்ச்சியடைந்த ஸ்ரீராமன், இவருக்கு தேவதா புருஷரை மகனாகக் கொடுத்தான். அவரே, சேதுராமர் (பின்னர் ஸ்ரீசத்யத்யான தீர்த்தர்).

ஒரு சுப முகூர்த்தத்தில் ஸ்ரீகளவர், கொர்லஹள்ளி ஜயாச் சார்யருக்கு ஆசிரமம் வழங்கினார். இவரே தமது உத்தராதிகாரி என்று அறிவித்தார். ஹெரகல்ல பீமசேனாச்சார்யர், முண்டரகி கனகராய நாயகர் ஆகியோர் புதிய ஸ்ரீகளவரின் பட்டாபிஷேக நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தனர். புதிய ஸ்ரீகளவருக்கு 'ஸ்ரீசத்யதீர தீர்த்தர்' என்று பெயரிட்டு அவருக்கு பிரணவ உபதேசங்களை செய்து சம்ஸ்தான பட்டாபிஷேகம் செய்தார், ஸ்ரீசத்யவீரர்.

சாலிவாகன சக 1808 (கிபி 1887), வியய நாம சம்வத்ஸரம் கார்த்திக சுத்த தசமி காலையில் ஸ்ரீசத்யவீர தீர்த்தர் ஸ்ரீமூலராம பூஜையை செய்தார். ஸ்ரீராமனின் பாதங்களை திரும்பத்திரும்ப வணங்கினார்.

இதுவே தனது இறுதி பூஜை என்று அறிந்து கண்ணீர் வந்தது. பக்தியில் மருகினார். அனைவரின் போஜனாதிகளும் முடியட்டும் என்று கூறினார். தாம் லய-சிந்தனையில் மூழ்கினார். நிரந்தரமாக பரமாத்மனின் தியானத்தில் ஈடுபட்டார். யோகாசனத்தில் அமர்ந்தார். பிரம்மரந்த்ரக மூலமாக தன் இறுதி பயணத்தை முடித்தார். வெறும் 47 வயதான அந்த தபஸ்வியின் உடலிலிருந்து ஸ்ரீசத்யவீரர் பரந்தாமத்திற்கு பயணம் செய்தார்.

இந்த நேரத்தில் ஸ்ரீசத்யதீரரின் மனம் நெகிழ்ந்தது. குருகளின் பிரிவு துக்கத்தை அளித்தது. துங்கா நதிக்கரையிலேயே ஸ்ரீசத்ய வீரரின் பிருந்தாவனத்தை நிர்மாணித்து, கார்த்திக சுத்த ஏகாதசியன்று அங்கேயே பூஜையை நிறைவேற்றினார். பின்னர் பல நாட்களுக்கு, தம் குருகளின் மகாசமாராதனையை மிகச் சிறப்புடன் நிறை வேற்றினார், ஸ்ரீசத்யதீரர். ஆயிரக்கணக்கான மக்களுக்கு அன்ன தானம், வெள்ளி பாத்திரங்கள், சம்பாவனை ஆகியவற்றை அளித்தார்.

ஆரணியின் மகாராஜா, ஸ்ரீசத்யவீரர் பிருந்தாவனம் அடைந்தார் என்ற செய்தியை கேள்விப்பட்டு, அவரது மூல பிருந்தா

*வனத்திலிருந்து மிருத்திகையை வரவழைத்து, ஆரணியில் அவரின் மிருத்திகா பிருந்தாவனத்தை நிர்மாணித்தார். அங்கு தினமும் பூஜை, ஹஸ்தோகங்கள் நடக்குமாறு தகுந்த ஏற்பாடுகளை செய்தார்.*

*ஸ்ரீசத்யவீரர் பிருந்தாவனம் பிரவேசித்த பிறகு, ஒரு ரூபத்தில் மலகேடத்திற்கு ஸ்ரீமத் ஜயதீர்த்தரின் சேவைக்காக வந்திருந்தார். அங்கு, ஸ்ரீரகுநாத தீர்த்தரின் பிருந்தாவனத்து வலது பக்கத்திலேயே வசித்தார். இதை ஸ்ரீடீகாராயர், அங்கிருந்த அர்ச்சகருக்கு கனவில் உணர்த்தினார். 'நாளை முதல் இங்கு ஸ்ரீசத்யவீரருக்கும் ஹஸ்தோதகம் கொடுக்க வேண்டும். அவர் இங்கு படிப்பதற்காக வந்திருக்கிறார்' என்றார். அதுபோலவே இன்றைக்கும் மலகேட ஸ்ரீ டீகாசார்யரின் பிருந்தாவன சன்னிதியில் ஸ்ரீசத்யவீர தீர்த்தருக்கும் தினமும் ஹஸ்தோதகம் கொடுக்கப்படுகிறது.*

*இன்றைக்கும் கொர்லஹள்ளி மூல பிருந்தாவனத்தில் நிலைபெற்று ஸ்ரீசத்யவீரர் பக்தர்களுக்கு அருளி வருகிறார். பக்தி உள்ளவர்களுக்கு, சேவை செய்பவர்களுக்கு தரிசனம் அளிக்கிறார். ஸ்ரீசத்யவீரரின் சன்னிதானம் இருப்பதால், கொர்லஹள்ளி ஒரு புனித க்ஷேத்திரமாக ஆகியிருக்கிறது. ஜனமேஜய மகாராஜாவால் பிரதிஷ்டை செய்யப்பட்டு, மறுபடி ஸ்ரீவியாசராஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பிராணதேவரின் சன்னிதானமும் அந்த இடத்திற்கு புனிதத்தன்மைக்கு காரணமாக இருக்கிறது.*

*|| ஸ்ரீசத்யவீர குருராஜோ விஜயதே ||*



# லாலி பாடல்

லாலி தசரத கரார்ச்சித மூலராம
லாலி திக்விஜயன் வயாக்யராம
லாலி சஜ்ஜன ஹ்ருதய சலிலேஷ சோம
லாலி சகலோத்தார க்ருதபுண்ய மஹிம (லாலி)

புத்ரகாமேஷ்டியொளு தசரதனலி புட்டி
க்ஷத்ரியலி கௌசிகன வைரிகள குட்டி
கோத்ரெயல்லி போகுதிரெ ஷிலெயன்னு மெட்டி
தாத்ரிசுதெ சீதெயனு பாணியொளு முட்டி லாலி 1

மண்டெயலி தரிசுதலெ தந்தெயாக்ஞெயனு
தண்டகாரண்யதொளு இருதிரலு நீனு
அண்டலெய சூர்ப்பனகி கரதூஷரனு
கண்டிசித கனகமயவாத ம்ருகவன்னு லாலி 2

காணதிரெ ஜானகியு கபிகளனெ கூடி
ஆ மஹாஉததியொளு மார்க்கவனுமாடி
க்ஷோணிபாக்ரணிகளனு யமபுரக்கெ நீடி
மானினிய அக்னி முகதிந்த ஒடகூடி லாலி 3

திருகி நிஜநகர பட்டணகெ பந்து லேஸாகி
சுர நரோகரெல்ல ஒலிது தலெபாகி
இளெராஜபத்தரிகெ அனுசரணவாகி
தொரெயெ ரக்ஷிஸு என்ன பரிதோஷஹோகி லாலி 4

கரமுகிது பேடுவேனு கேளென்ன மாத
துரிதனாஷவ மாடோ நீடா சமேத
கொர்லஹள்ளியொளகிருவ ப்ராணேசதாத
குருசத்ய வீரரிங் கரபூஜெகொம்பாத லாலி 5

★★★

## ஸ்ரீசத்யவீர தீர்த்தர் மேல் பாடிய பாடல்

ஆராதிஸேலோ மனோஹர ஸ்ரீகுரு சத்யவீரர சரமசரோருஹவ ||ப||

மூரு தாபதி பாயாரிதவரிகெ ஆதாரரிவரு பஹுகாருண்யயுதரு நீ ||அப||

ஏனித்த வர கீர்த்திகாந்திகெ சமவெல்லி காணினோ தரெயொளு ஹலவித்தரு|
ஹீனவல்லதெ ஜனகேனு திளியதோ பிரம்மாணிகெ ।
குந்தள கலங்கவு தானாகி ।
காலிந்தி சங்கதவல்லவே கங்கே ।
தன்னொளகெ திருகுத சந்த்ர திருகனெ நித்ய நிஷியொளகெ ।
ஆ நாகராஜகெ விஷகலங்கவு ஆகதே ஹ்யாங்கே ।
இன்னேனு இரலது மானநிதிகள மௌளிமணி விபுதானுராகி கூடி ।
சர்வதாத்யானதொள கிருதிஹரு இவர சமானரார்யை நீனே தோரிஸு 1

பொடவியொளகெ கொடுவரெம்புவ ஜனரடகிகொண்டரு இவரொடலொளகெ ।
படவரெம்புவ நுடி தடெயதெ பேடித்து கொடுவரோ ।
ஹிடி ஹிடிகையிந்தலி கொடுவதொந்தனு பல்லவரிவரெல்ல ।
படனொடனெ ஒதகிஸி கொடுவ நடதிய ஜலஜஜனெ பல்ல ।
ஒடலாடலேனது மிடுகுதிர்தனு கர்மனித்தரெ கடபடிஸி ஷிபி பலி திஷிசுத ।
தடபடிஸி தர்மஜனு தானதகொடவி நிமக்யாகென்னதிஹனே । 2

குரு மத்வமுனியிந்த விரசித ஷாஸ்த்ரவ ஹகலு இருளு பாட விரசிசுவ ।
பரம பாண்டியத்யக்கெ சமர்யாரு இவரிகெ சரியாத ।
வாக்சரணி மௌக்திக சுரியாவெ ।
மோஹாந்தகார களளியாவெ ।
சரசரனெ பருதிஹ சரவசோ விஸ்தரணதம்புவின ।
தரெதரெகளொளகெ முணுகி தேலுத பாயி பிட்டு ஜனா ।
இருவதனு பிடு நீ ।
பரம நேதா ராமசந்த்ரர உரு கராப்ஜதி பூஜெகையுதலிருவரை ।
ப்ராணேஷ கருணாகரரு இவரே தன்யதன்யரு । 3

★★★

# ஸ்ரீசத்யவீர குருராஜாஷ்டகம்

யத் ஸதீஷ்வரம் உத்தமாப்ய திவாகரம் கருணாகரம் ।
சத்யவீர குரும்பஜே அஷீதிபாசுரம் ப்ரதிவாசரம் ॥

மதவாதி கஜேந்த்ர தர்க சிரோபிதாம்ருக சேகரம் ।
நுத்ததூர்த்த ஜனோத்கரம் தருணாருணா பவவாம்பரம் ॥
சத்ய சங்கர மத்குதாரஹ்ருதல்லசத் துலசீசரம் ।
வ்ருத்தகந்தர மத்குனல்ப புஜாந்தரம் ரிபுபீரம் ॥ 1

இந்திரேஷ பாதார விந்தேந்திந்திரம் புதமந்திரம் ।
வேதவாரிதி மந்தரம் ம்ருதுலாதரம் கமலோஷிரம் ॥
மந்தஹாச லவப்ரபாஸ்த நிஷாகரம் த்ருதமஸ்கரம் ।
மந்தவாதி மதாந்தகார தினேஷ்வரம் தனபீஹரம் ॥ 2

ஸ்பர்துனீஜயவாக்ம ரீஜதவாக் பதிம்நத சத்ததிம் ।
நிர்ஜரத்ரும காமதேனு ஷிரஸ்க்ருயாசடுலாம்ஹதிம் ॥
சஜ்ஜன த்ருமஹர்ஷ கோத்படவார்பகாம்புத சந்ததிம் ।
நிர்ஜரேஷ மஹோன்னதிம் விலசத்க்ருதிம் லசதாக்ருதிம் ॥ 3

தீரதீக்ருத சாஸ்த்ரனிந்தித பாலகார்ய விபர்த்ருகோ ।
த்வாஹசாதக லோககோகனபோமணிம் மிசத்க்ருணீம் ॥
பாரதீஷ மதானுயாய ஜனாரிமத்த கஜோத்ருணீம் ।
மாரதாத பதார்சனாத் யதிபாணி மாத்ர குணோன்னதிம் ॥ 4

விப்ரசாத் க்ருதரௌப்ஸ பாத்ர சமூஹகைரவ பாந்தவம் ।
சப்ரலோல புதௌக கீர்த்தித தோஷஹீன குணார்ணவம் ॥
தப்தசக்ர தராதி திவாகர சிஷ்ய குல்பம ஹேருஹம் ।
நித்ய சுஸ்ம்ருத மாதனம் கதரோபலோப மனோபமம் ॥ 5

பூர்ணபோத சுகாஸ்த்ருசார விசக்ஷணம் க்ருதலக்ஷணம் ।
வர்ணதோஷ காரிதுர்ஜன சங்கமர்மத வாரணம் ॥
ஸ்வர்ண தண்டதரானரோத்ஸ்க்ரூர வைஷ்ணவோத்தம பூஷணம் ।
கர்ணசம்ப்ருத ராமகீர்த்தி விபூஷணம் ம்ருதுபாஷணம் ॥ 6

மூலதிக்விஜய வம்சபூர்வக ராமவிட்டல நாமகானம் ।
நீலவேத வியாசபஞ்சக பூர்ணபோத சுபாதகான் ॥
நீலபீத சீதாருணோஜ்வல ரத்னமால்ய கதம்பகை: ।
ஷீலபூர்வக மர்சயந்தமபோத தூலசுபாரகம் ॥ 7

ப்ரோல்ல சத்க்ருரசத்தராக்ரவம் பாணிபத்ம சமுத்திதம் ।
வல்லகேதர யோகிபூர்வக வ்ருந்தகேய மஹோவ்ருதம் ॥

உல்லசத்ருன துங்கமாம் ருதுபத்ரயா பரிபாஸ்வரம் ।
கொர்லஹள்ளி புரேஸ்திதம் குருசத்யவீர யதிம் பஜே ॥ ௮

சன்முகுந்த குலாவதம்ஸ கவீஷகாந்த வினிர்மிதம் ।
சன்மனோஹர மாயுரர்த்த யஷப்ரதம் பஜதாந்த்ருதம் ॥
ஜன்ம துக்கஹரம்புதா குருபாதபத்ம சமர்ப்பிதம் ।
சத்யவீரவராஷ்டகம் ஹ்ருதிதாரயந்து சதாபுதா: ॥ ௯

இயற்றியவர் : **முகுந்திகுல கவீஷகாந்தரு**
சேகரித்தவர்: **குத்தல் ஹயக்ரீவாசார்ய நியாயவேதாந்த வித்வான்**
(தற்போது வீற்றிருக்கும் ஸ்ரீமத் உத்தராதி மடாதீசரின் பூர்வாசிரமத சகோதரர்)

★★★

# ஸ்ரீ 108 ஸ்ரீ சத்யவீர மகாத்ம்யம்
## ஸ்ரீசத்யவீரரின் மேல் பாடப்பட்ட பாடல்

ஸ்ரீகுருப்யோ நம:

அசமகுரு ஸ்ரீ சத்யவீரரு
எதுரார்யை குருவே சமரார்யை ॥ப॥

சதயராத சத்யவீராக்யரிகெ
புரதொள் அதிகவாத பாக்யன கரதல்லி ॥அப॥

கரிஹய முக பஹு பிருதுகளிந்தலி
மெரயுத ஷரனர பொரெயுத பஹுதன
சுரிசுத புதஜன ஹருஷகரிகெ 1

மதராஸினொள் பால விதவெயரிகெ புனர்
மதுவெயாகி அது விதி ஜோதிதவெந்து
வித வித கல்பித சாஸ்திர கௌஹி இல்லெ
ஒதகி விஜயகாகி அர்த்திதயதிகெ 2

ரகுனாத ராயரிந்தலி வாதிபதகெ
நிகஞரிகாஞவ கோசுதாக்ஷண
ரகுனாதீய வசன ப்ரமாண
பகிய குருது கேளித யதிவரகெ 3

ஷாஸன யாத்ரகெ சர்வ சாஸ்த்ரக்ஞரு
தேஷ தேஷதிந்த பரலு வித்வக்ஞன
ராஷிமத்யதலி வியாசனெந்தொப்புதே 4

வித்யுக்த வைவாஹிக சாஸ்திர ஜிக்ஞாஸ
சப்தித புஸ்தக களுஹித மாத்ரகெ
மத்வமதத உத்தாரக மாத்ரகெ
எத்த ஜன்மபுரகுத்த உத்தரிகெ 5

பரிஷரியதி மாதவீயதொளு
தோருவதெரடு ப்ரமாண ஹொரது மத்தெ
ஆரு சஹித ஒம்பத்து ப்ரமாணக தாரி
மத்தெல்லெந்து சார்யவாதினளு 6

நஷ்ட ம்ருதெயெம்ப வசனதல்லி பலவிட்டு
நடிவனுடி ஷிஷ்டரொப்புவஹல்ல
ஸ்பஷ்டபப்ரவ்ய ஸ்ம்ருதிய சாதிஸி
விஷிஷ்ட ஜயஸித சிஷ்டோத்தமரிகெ 7

சப்தபதுத்தர ம்ருதனாகலு பதி
மத்தெ கன்யாதான கர்ஹஅல்லவெந்து
மர்த்யரு மாடலு ப்ரத்யவாய
ப்ராயஸ்சித்த மத்தில்லெந்து விதிபரிகெ 8

ஹேயபு ஸ்த்ரீகெ பரபுருஷர சங்கம
நியாய தோருத நிஸ்சித மதியொளு
ராயரிந்த பஹு உபாயதிந்த
வித்வக்ஞய னெனெஸிதந்த ஞானி சத்குணெகெ 9

நிஜகுரு யஜனதின சத்விஜரிகெ
ரஜித தேவாதார்ச்சன பாத்ரகள
அஜஜனனாப சுப்ரீதனாகலெந்து
பஜிஸி பூரித்ரவ்ய ப்ரதாதனிகெ 10

விதிவக்ஷதவரு பேளித வசனக
ஒதகிதர்த்த சப்த பதக பூர்வதிந்த
வித வித நியாய தோரிஸி சன்மத
புதரிகெ மாடித சதய சஹ்ருதயகெ 11

ஸ்வல்ப மதிகளிந்த கல்பித ஜல்பித
ஒப்பதெ சர்வரிகொப்பிஸி தப்பனு
விப்ர கன்யெ விதவெயருத்வாஹதி
விப்ரலுப்தராக ப்யாடம்பரிகெ 12

வாதிராஜரிகெ வாயுபதரதெ வாதி
பதல்ல அபவாத வெந்தெனிஸி சாதிபதரிகெ

தக்க ஹாதியு காணதெ
ஸ்வீய பதகெரகுவந்தெ மாடித யதிவரகெ 13

காந்தியொளு தினமணி க்லாந்தியொள
கும்பிணி ஷாந்தியொள சோமன
தாந்தரொளு பீஷ்மனு
ப்ராந்தவாத பவகாந்த ரூபாந்தர
சிந்திஸி பொரெவ ஏகாந்த பக்தரிகெ 14

மந்தஹாஸ முகதிந்த வந்த்யஜன
வ்ருந்தானந்தன சுந்தர மமகுரு
தந்தெ வெங்கடேச விட்டலாத்மக
தஷஷந்தன நந்தன வந்தன தொரெகெ 15

**- ஸ்ரீதந்தெ வெங்கடேசவிட்டலதாசர் இயற்றியது**

★★★

## ஸ்ரீ சத்யவீரனுதி பஞ்சீகா

ஸ்ரீசீதா ரகுநாத பூஜ்யசரணம் த்யாயன் சதாபூஜித:
யோவிப்ரை: ப்ரதிவாதி நிக்ரஷபடுஸ் துங்காதடி சம்ஸ்தித:
ஸ்ரீவேதாந்த பயோதிஜாம் ஷுபசுசுதாம்பீத்வா க்ஷமலாம்வஹன்
ப்ரஜத் விஷ்ணு சதங்கமண்டித வபுஸ்த சத்யவீரம் பஜே 1

ஸ்ரீகிருஷ்ணர்ச்சித பாதபத்மயுகலம் ஸ்ரீ சாஸ்த்ர நிர்மாணகம்
ஸ்ரீவிஷ்ணும் ப்ரதிபாதயந்தமமலம் ஸ்ரீயுக்தபீமாபிதம்
ஸ்ரீபாலம் சுரவந்த்ய ப்ரதிஹதம் ஸ்ரீமத்வனாமாங்கிதம்
ஸ்ரீபிராணம்ஹ்ருதி தாரணாத்ருசியுதம் ஸ்ரீசத்யவீரம் பஜே 2

ஸ்ரீநாதார்ப்பித மோதனம் த்வனுதினந் தத்வாத்விஜேப்ய: சுதீ:
தேஷாம் தத்வமுபாதிஷன் சதசியோ ராஜத்தயா வீக்ஷண:
ஸ்ரீமன்மத்வ சுதர்ஷனேந்து லலிதம் யஸ்யாஸ்ய சத்யைரவம்
யோவித்ய க்ஞன பூஜபூஜ்ய சரணம்ஸ்தம் சத்யவீரம் பஜே 3

ஸ்ரீமானாரணிபூபதி: க்ருதனதி: யஸ்ய ப்ரசாதாத்சுதம்
லேபேயேனதுதூஷிதம் ஹிவிதவாகல்யாண கார்யாம்ப்ருஷம்
ஸ்ரீமத் சத்யபராக்ரமாக்ய யதினம் சம்சேவ்ய சன்மானிதம்
யோன்யெவார்ஜித ஆஷ்ரமோஹிசரமஸ்தம் சத்யவீரம் பஜே 4

ஸ்ரீஷானுக்ரஹ பூரிதம் யதிவரம் யார்திக்ய கர்வாபஹம்
கஞ்சாக்ஷம் வரகண்டபல்லி நிடயம் பக்தேஷ்ட சந்தாயினம்

ஸ்ரீமத்வைஷ்ணவ வ்ருந்தப்ருங்க ஜலஜம் பூகல்ப வ்ருக்ஷாயிதம்
சன்யாசோசித தர்ம பாலகமஹம் ஸ்ரீசத்யவீரம் பஜே 5

கண்டபல்லி விக்யாதபுண்யக்ராமகதேனஹி
பீமீனவிரசிதேயம் சமாப்திமகமன்னுதீ:

**– வித்வான் பீமசேனாசார்ய கொர்லஹள்ளி அவர்கள் இயற்றியது.**

★★★

## ஸ்ரீசத்யவீர தீர்த்த ஸ்தோத்திரம்

ஸ்ரீமன்மத்வ பயோதிலப்த ஜனிமான் சம்பூஷிதாத்ம ப்ரப:
சதோவித்ய திருஷ்டவாதி குஜனான் சித்தாந்த வாத்ஸயகை :
நிர்மாத்ஸர்ய யுதேன சுத்தமனஸா சம்பீஷயன் மோதயன்
சந்துஷோபவதான் மஹீஷமஹித: ஸ்ரீசத்யவீரோகுரு: 1

ய:ஸ்ரீமத்ரபுரீஸ்த சஞ்ஞனமணீன் சம்மீல்ய கோபேந்த்யதாத்
தத்ரத்யான் குமதப்ரசார நிரதான் வாதேஹ்யதிக் ஷிப்ரவான்
அசக்திம் விதவா விவாஹகரணி ஸ்வேயம் நரம் லௌகிகம்
சன்மார்க்கம் சமபோதயத் சயதிராட் சுத்தம் விதத்யான்மதிம் 2

யோதேவோ புவிவர்த்ததே கலியுகே ஸ்ரீசத்யலோகேஸ்வர:
நிர்தோஷம் பஹுதாவிபூஷித தனும் த்யாயந்தியம் யோகினோ
தன்விப்ரேந்த்ர சுரேந்த்ர வந்திதபதம் ஸ்ரீமூலராமம் சதா
அர்சன்னித்ய மதந்த்ரித: சகுருராட் குர்யாத்சதா மங்கலம் 3

வந்தேஹம் நிகிலாகமக்ஞ விபுதம் சந்துஷ்ட சித்தம்சதா
துர்வாதீந்த்ர கஜேந்த்ரமர்தன படும் பஞ்சாஸ்ய சஞ்சாரணம்
சிஷ்யேப்ய: ப்ரதிஷந்த மன்னனிசயம் பக்ஷ்யாதிசம்மிஸ்ரிதம்
வித்வத்பி: சஹதத்வ சாஸ்த்ர நிசயம் சம்போதயம் தம்சதா 4

ஸ்ரீமத் சத்யபராக்ரமாப்த விபவ: ஸ்ரீசத்யவீரோகுரு:
சன்யஸ்தாகில வைபவ: சமதனோத் கீர்திம் ப்ரஷஸ்தாம்புத:
நானா க்ஷேத்ர சமர்சிதாமரவரம் ஸ்ரீ மூலராமம்சதா
த்யாயன் னஸ்தமிதாத்ம தோஷனிசரோ விருந்தாவனேராஜதே 5

ரூப்யபாத்ர நிசயந்ததாதி யஸ்தத்ர தத்ர சுசபாசு கீர்த்திமான்
கர்ணாவி வபுவமாகதிஸ்த்விதி ப்ரேக்ஷ்யதே சலசஜ்ஜனை: ப்ரபு: 6

இதிஸ்துதி ஸ்தோமவரேடிதோயதி:
ப்ரவரவாதி ஜனமண்டலிவ்ருத:

விரக்தி பூஷாபரிமண்டித: கவி:
சமக்ரமாபூரயதான் மதிஷ்டம் 7

அத்ருஷ்ய ரூபேண ஷிலாதனௌஸ்தித:
சுகேன சம்சேவன மோதிதோகுரு:
திஷன்னவாச்யம் வரவைபவம் சதெ
தயாலுனாம்னா பரிகீர்த்திதோபுத்யை: 8

சுகதீர்த்த தீர்த்தவரசேவனோஸ்துக:
ப்ரததாது மஹ்யமதுலாம் ஸ்ருதேர்மதீம்
ப்ரதிபாதி சாஸ்திர படனோசித்யோர் குணை:
சமலம் க்ருதாம்ஸ்ச படு சிஷ்ய புங்கவான் 9

படமாத்புதம் பரமசுந்தரம் கரிம்புவமாகதம் பரம பக்தவத்ஸலம்
வரராமமூர்த்தி மனிஷம் பராத்பரம் சமுபாஸ்ய தத்ரக்ருதினம் நமாம்யஹம் 10

வரசத்யவீர முனிமிந்த்ர சன்னிபம் வரமத்யபீடக மஹர்னிஷம் பஜே
ஸ்ரீதவத்ஸலஞ்ச சுவிரக்த மானசம் கலிதாப சாஸ்த்ரிதமனங்க வர்ஜிதம் 11

வர பாதராயண சஹாயசம்பதா சுவிஷாலசம்பத பஸ்தகல்மஷம்
வரயோகினஞ்ச சுவிவிக்தமானசம் ப்ரணமாமி தத்பதயுகம் வினம்ரதீ: 12

த்ருதபாதபத்ம விபவோஹ மத்யமே படமம்விராகமபிசின் தமேனிஷம்
தனுதான்ம மேஷ்ப நிசயம் பரோகுரு: கருணாமய: சகலபீதிபஞ்சன: 13

புவிஆரணேன்ருபதி புத்ரதோகுரு: நிஜஹஸ்த தத்த வரமந்த்ரிதாக்ஷதாத்
பயபீதராஜ பரமார்த்தி புஞ்சன: ப்ரதிஷேன்ம மாத்யபவபீதி பஞ்சனம் 14

ஸ்ரீநாத கீர்த்திதமிதம் வரபத்ய விருந்தம் ஸ்ரீசத்யவீர மஹிமம் சதாம்ப்ரியம்
பரமாதராத் படதியோனரஷுசி: குருசன்னிதௌ சலபதிபராம் முதம் 15

★★★

## ஸ்ரீசத்யவீரரின் கவசம்

ஸ்ரீசத்யவீராய நம:

கவசம் சத்யவீரஸ்ய தத்க்ருபாலவ மாஸ்ரித:
மந்தானுகம்பயா வக்ஷ்யே சாஸ்திரார்த்த ஞானசித்தயே 1

சத்யவீர: சிர: பாது பாலம் பக்தஜனப்ரிய:
த்ருஷௌமெ தர்ஷனபடு: கர்ணௌ கமலலோசன: 2
நாசாம் நாரயணபர: வதனம் வந்த்ய சத்குண:
ஒஷௌ ஓம்கார நிரத: சிபுகம் சித்ரதர்ஷன: 3

கண்டம் கண்டீரவ சம: புஜௌ புவனமோஹன:
ஹ்ருதயம் ஹ்ருத்ய ராமஸ்ய: குக்ஷம் மே குலஷோதன: 4

மத்யம் பாது மஹா வித்ய: குஹ்யம் குருஜன ப்ரிய:
ஊர்ணவஸ்த்ரப்ரிய: பாது சதா ஊரூமமானக: 5

ஜானுனீ ஜாகராபிக்ஞு: ஜானகிநாத பூஜக:
ஜம்புலு: பாது ஜங்கேமெ குல்பௌ குல்பஜனாபஹ: 6

பாதௌமெ பாபசம்மர்தீ ஷரீரம் ஷஸ்தசகுண
ப்ராண நாதப்ரிய: பாது ப்ராணான்மெ சர்வதாகுரு: 7

ஷ்வாசான்மே ஷ்வாசனாதஸ்ய ப்ரிய: பாது ஹரிப்ரிய:
ஜீவம்பாது சதா ஜீவஜாதஸ்ய பரிஷோதக: 8

இத்யேத் கவசம் திவ்யம் சர்வகாம பலப்ரதம்
ய படேத் ப்ராததருத்தாய ஸ்னாத்வா ப்ரயதமாஸன: 9

லபதே வரமாம்ஷாந்திம் புத்ரபௌத்ராதி சம்பதம்
துஷ்டிபுஷ்டிப்ரதம் ஸ்ராவ்யம் கவசம் தாரமேத்தத: 10

தாரணாத் படனால்லோகே தன்யோ பவதி மானவ:
பக்திப்ரணீதம் கவசம் பக்திமுக்தி பலவிரதம் 11

வாசயேத் சூரிசதஸி பஹூபுண்யம் அவாப்னுயாத்
ஸ்ரீசத்யவீர குருராஜ வர்த்தாம் ஹ்ருதி சர்வதா 12

**– ஸ்ரீ வித்வான் ஸ்ரீநாதாசார்ய பாண்டுரங்கி அவர்கள் இயற்றியது**

★★★

## ஸ்ரீ சத்யவீர மகாத்ம்யம்

ஸ்ரீமன் மத்வ மஹார்யபீட முனிஷுயோ த்யாஸர்ய ரஜதே
யோ துர்வாதி கண்டனபவி: யோ மூலராமம் பர்ஜ
ய: கர்ணாம்ஷ இதீரிதோ யதிரபூதித்யேவ சஞ்ஞாபிதோ
யோ ரண்டாவிதவா விவாஹ தலனே தக்ஷோ ஹி தீக்ஷாகுரு: 1

யோவிர்த்வ மஹனீய ராஜமஹிதோ யோ பூஷர்ய பூதலம்
யோ வா வேதவிதாம் விவாதமனிஷம் ஷார்சசபா மண்டலே
யோத்யாஸ்தே புவி கல்பவ்ருக்ஷ சுதரு: தம் சத்யவீரம் பஜே 2

யோ தேவார்சன சேவனாதி நிரர்தா சம்ஷாசர்ய சஜ்ஜர்னா
ஸ்வாக்ஞாஷாஸன பத்ரிகாபிரனி ஷம் சம்மீலர்யபத்தனே

யோ தத்வா ரஜதாத்ம கானி மஹதாம் பூஜோபகரணானி ச
சந்தோஷங்கமர்ம புர்தா பரிபதி யோ ராஜதாதிஷ்டித: 3

யோவா வாதிசமூஹராஜமஹிமா ஞானேன ஹீர்னஜர்னா
தூஷ்ணீம் மார்திக மந்தலாதிபமுர்னீ சம்ஷோதர்ய சம்சதி
தேஷாம் ஞானமுதீரர்ய புவிதலே சம்பிதர்ய சம்ஷயம்
சர்வேஷாம் மஹதாம்ஹி பூஜிதபதோ யஸ்தீர்த்த யாத்ராம்ஸ்சர்ர 4

ஸ்ரீமத்ராம பதாசர்கம் முனிமணிம் சம்வீக்ஷர்ய கம்சம்முதா
யத்ராஸ்தே விஜயோ குருர்விஜயதே ய: சத்யபூர்வ: சதா
யோவா த்வைஷிகராஜ மானிமுகுடா லங்கர பாதோகுரு:
யோவா ப்ரம்ம ஷிவாதிவந்த்ய சரணம் த்யார்ய சதா திஷ்டதி 5

தத்ராவர்ஸ முனிமணி: ஹரிபூஜகேஷு
பூர்ணாம் தயாகராவம் நிவசன்னிதிர்ஸ்ம
தேனார்தித: சபதி ராஜசபாஜனேன
க்ருத்வா தயாம் பரமிகாம் குருமண்டபேர்ஸ்மி 6

சகார ராமஸ்ய பதாரவிந்தயோ:
பூஜாம் ப்ரகுர்யாதிதி ஷிக்ஷயன் ஜனான்
தத்ராஷ்டு பூபஸ்ய விஷுத்த கீர்த்தே: ஸ்வபாதபக்தஸ்ய நிரூபணம் குரு: 7

புத்ரப்ரதானேன மனோரதம் ச சம்பூரர்ய யோ ந்யவசத்புரே குரு:
அனந்தரம் தேஷுக்ருபாம் விதாயசசார யாத்ராம் புனரேவசம்யக் 8

ஸ்வச்பந்தம் வரணம் சவீக்ஷ்ய புவிய: சக்கார்ய சர்யாதிகம்
நாவேக்ஷன்னக மத்வஸேய மஹமத்ரைவ க்ராமேத்விதி
தஸ்மின் க்ராமவரே குரௌ நிவசதி சத்தர்ம பாஜே பவன்
சச்சாஸ்திரம் படயந்த அசுரஜனான் சம்போஹயந்த: சதா 9

கண்டபல்லேதி விக்யாதே புண்யே க்ராமவரே வசன்
சாதுர்மாஸ்யந்திம தினே வைகுண்ட மகமன்மனி: 10

தசஸ்லோகி சத்யவீர குருமஹாத்ம வர்ணனே
ஸ்ம ரதாம் புண்யதா ஷுத்தா சர்வபாப ப்ரணாஷினீ 11

படதாம் ஞானதா முக்தி த்வாரசோபான தர்சினி
அனிருத்தாக்யேன யதினா ரசிதா ப்ரீதயே சதாம்
தத்பக்தா ஸ்ராவயேத்வாபி சர்வபாபை: ப்ரமுச்யதே 12

**o- ஸ்ரீ 108 ஸ்ரீ அனிருத்த தீர்த்தர் இயற்றியது**

